

வெள்ளைத் தாமரைப்பூவில் இருப்பாள்
　　வீணை செய்யும ஒலியில் இருப்பாள்
கொள்ளை இன்பம் குலவும் கவிதை
　　கூறும் பாவலர் உள்ளத்தில் இருப்பாள்
உள்ளதாம் பொருள் தேடி உணர்ந்தே
　　ஓதும் வேதத்தின் உள்நின்றொளிர்வாள்
கள்ளமற்ற முனிவர்கள் கூறும்
　　கருணை வாசகத்துட் பொருளாவாள்.

—பாரதியார்.

அக்டோபர், 1985

# ஸப்தகிரி

இதழ் 5 மலர் 16

தனிப்பிரதி ரூ. 1 வருடச் சந்தா ரூ. 12

## உள்ளுறை



### அட்டைப்பட விளக்கம்

அட்டையில் : திருமலை பிரம்மோற்சவத்தில் ஸ்ரீ உற்சவர்.

2-வது : ஸ்ரீ சரஸ்வதி அலங்காரத்தில் ஸ்ரீ பத்மாவதி தாயார்.

3-வது : திருமலையில் புஷ்ப யாகம்.

பின்னட்டையில் : திருமலையில் திருத்தேர்.


*சிறப்பாசிரியர் :*
திரு. எஸ். லக்ஷ்மிநாராயண I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

*அச்சிடுபவர்:*
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

*ஆசிரியர் :*
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

*துணையாசிரியர்:*
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு:
THE WELFARE OFFICER
Publication Section, T.T.D
K. T. Road,
TIRUPATI.

# உங்களுடன்...

''ஆலயம் செல்வது சாலவும் நன்று'' என்று கூறிப் போந்தனர் ஆன்றோர் அன்று. இறைவன் குடி கொண்டு அருள்புரியும் வாசமாக மட்டுமன்றிக் கலைகளின் இருப்பிடமாகவும் திகழ்ந்தன கோயில்கள். கலைகளால் கோயில்களும் கோயில்களால் கலைகளும் வளரத் தொடங்கியதன் விளைவாக நாடெங்கும் கோயில்கள் எழும்பின: அருட் கோயிலாகவும், கலைக் கோயிலாகவும் விளங்கிய அவ் ஆலயங்களை மக்கள் ஆர்வத்துடன் ஆராதித்தனர். சமய விழாக்களைக் கண்டுகளிக்க மட்டுமன்றி, மனயமைதியினைப் பெற்றிடவும் மனிதன் கோயிலுக்கு வருகை புரிந்தான். இதற்கு அன்று நிலவி இருந்த கோயில் சூழ்நிலையே பெரிதும் உதவியாக அமைந்தது. பெருகி வரும் மக்கட் கூட்டத்தை எண்ணிப் பார்த்திடும்போது, ஒரு கோயிலைச் சுற்றி நிலவ வேண்டிய அமைதிச் சூழலின் அவசியத்தை உணர்தல் அவசரமான ஒன்றாகும்.

அன்றைய புண்ணியத்தலங்கள் ஆன்மீகத் தாகத்தினைத் தீர்த்திடும் வகையில், சமய எழுச்சியைத் தூண்டிடும் நிலையில் விளங்கின. ஆனால் இன்று அவை பொழுது போக்குத் தலங்களாகவும், வியாபார நிலையங்களாகவும் மாறிவிட்டன. இதற்குக் காரணம் மனிதப் பெருக்கமும், பிரச்சனைகளின் நெருக்கமுமேயாகும். இச்சூழ்நிலையில் மனிதனின் மனம் கலங்கியது; சிந்தனை தடுமாறியது. தடுமாறிய அவனைத் தூக்கி நிற்க வைத்து, வாழ்க்கையில் நம்பிக்கையூட்டி, அவன் பிறப்பின் முக்கியத்துவத்தை உணர்த்திடும் அமைப்பாக இன்று கோயில்கள் அமைந்திட வேண்டுவனவாக உள்ளன.

சீரிய சிந்தனை பிறந்திட மனிதனுக்குத் தேவை மனயமைதி. அதற்கு ஆன்மீகச் சூழல் பெரிதும் உதவும். பிரச்சனைகள் சூழ்ந்த இல்லத்தைவிட்டு சற்றே விலகி இருக்கச் செய்து, அவனிடம் ஆக்கப் பூர்வமான, ஆரோக்யமான நற்சிந்தனைகளைத் தூண்டிடவே வான்முட்டும் கோபுரங்களையும், பரந்த பிரகாரங்களையும், கண்ணையும் கருத்தையும் கவர்ந்திழுக்கும் சிற்பங்களைக் கொண்ட கற்மண்டபங்களையும் கொண்ட கோயில்களை எழுப்பினர் ஆழ்ந்து சிந்தித்த நம் ஆன்றோர்.

தாமும் தம் இனமும் நற்கதி பெற்றிடவே உயர்ந்த உள்ளத்துடன், சீரிய சிந்தனையுடன், உழைப்பின் உன்னதத்துடன் கோயில்கள் பலவற்றைக் கட்டினர். அவற்றுள் முனிவர்களின், ஞானிகளின், மெய்யடியார்களின் பாதம் பட்ட, அவர்களின் அருட் குரல் ஒலித்த, இலக்கியங்களும், கலைகளும் மலர்ந்த கோயில்கள் இன்று உள்செல்ல பாதையின்றி முட்புதர்கள் வழி மறிக்க, ஒரு அகல் விளக்கும் ஏற்றுவாரின்றி, கடல் கடந்து வந்து மேலையார் கண்டு அதிசயித்த கோயில் சிற்பத் திருவுருவங்கள் இன்று கடல் கடந்து செல்லும் அவல நிலையில் உள்ளாகி யிருக்கின்றன. இந்நிலையில், வேதச் சிறப்பும் புராணப் பெருமையும் கொண்டு இன்று விளங்கிடும் சில கோயில்களில் முதலிடம் பெற்று, கலியுகத்துன்பம் விலகிட, அர்ச்சாவதார பெருமை பரவிட, சமய ஒற்றுமை தழைத்திட, சிந்து சமய சாம்ராஜ்யத்தின் பெருந்தூணாக இருந்து, நாளும் பெருகிவரும் வருமானத்தையும், ஆயிரக் கணக்கில் பக்தர்களை நாளுக்கு நாள் ஈர்த்துக் கொண்டும் விளங்கும் அலர்மேல் மங்கை மணாளன் அருளாட்சி புரிந்து வரும் திருமலையை நாம் காண்பதும், நம் சந்ததியினர் அறியவும் இருப்பது நமது பழம் வினையின் பெரும் பயனாகும்.

இத்தகு பெருமைமிகு திருமலைக் கோயில் அமைப்பால் சிறியதானாலும், தன்னை அமைத்துக் கொள்ளும் வகையால் மற்றைய அருட் தலங்களுக்கு ஒரு முன்னுதாரணமாக இருக்க விழைந்துள்ளது. கோயிலுக்குள் புகுமுன் தான் ஒரு வெள்ளிக் கூடத்திற்குள் செல்லுகின்றோம் என்ற ஒரு மனப்பாங்கு பக்தனின் உள்ளத்தில் தோன்றினால் தான், அப்பக்தனால் ஒரு முகத்துடன் அப்பேரருளாளனின் திவ்ய தரிசனத்தைக் கண்டு மனம் லயித்திட முடியும். அந்த ஒரு விநாடி பேரின்பப்பேறே, அவன் வாழ்நாளின் பேருண்மையைக் கூறிடும் பெரும் அனுபவமாக அமைந்திடும். இதனை மனதிற் கொண்டே, கோயிலைச் சுற்றி ஒரு ஆன்மீகச் சூழலை ஏற்படுத்தவும், திருமலையை ஓர் அழகுமிகு நகரமாக செய்திடவும் தி. தி. தேவஸ்தான மேலாண்மை சில ஆக்கப்பூர்வமான திட்டங்களை மேற்கொண்டுள்ளது. சுமார் ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னால் முன்னூறு ஆக இருந்த திருமலையின் ஜனத்தொகை இன்று முப்பதாயிரமாக பெருகியிருப்பதால், அது கோயிலைச் சுற்றியுள்ள இடம் ஒரு வியாபார தலமாக உருவாக்கி, கோயிலுக்குள் சென்று வரும் பக்தனின் உள்ளத்தில் ''விட்டால் போதும், வீடு திரும்பினால் போதும்'' என்ற ஒரு எரிச்சலுணர்வை ஏற்படுத்துகின்றது. இந்நிலை மாறிட திருமலை ஜனத்தொகையினை முடிந்த அளவு குறைத்திட வேண்டும் என்ற எண்ணத்தினால், அவர்களைத் திருப்பதிக்கு அருகு உள்ள இடங்களில் குடியமர்த்திட மேலாண்மை எடுத்துள்ள முயற்சியின் முதல் கட்டமாக, அவர்களில் ஒரு பகுதியினர் அண்மையில் திருப்பதிக்கருகில், வீடும் கடனும் கொடுக்கப்பட்டு குடியமர்த்தப்பட உள்ளனர். திருமலையில் வியாபாரத்திற்கென ஒரு ''கட்டிடத் தொகுதி'' ஒதுக்குப் புறமாக கட்ட முடிவு செய்யப்பட்டுள்ளது. திருமலையில் பக்தர்கள் இயற்கைச் சூழலில் தியானத்திலீடுபட்டுத் தங்களிடம் இறைமைப் பண்புகளை வளர்த்துக் கொள்வதற்கென சிறுசிறு ஆசிரமங்களை ஆங்காங்கு அமைத்திடுதல், மான் மற்றும் பறவை பூங்காக்களை ஏற்படுத்துதல், மணம்மிக்க வண்ண மலர்கள் பூத்துக் குலுங்கிடும் வகையில் மலர்த்தோட்டங்களை உருவாக்குதல், நாளும் விந்தை புரியும் அந்த வானத்தின்கண் விளங்கிடும் அற்புதங்களைக் கண்டு மகிழ்ந்திட 'கோள் நிலை இயக்கம் காட்டும் இயந்திரம்' ஒன்றினை ஏற்படுத்துதல் போன்றவை தேவஸ்தான மேலாண்மை மேற்கொண்ட முயற்சிகளில் சிலவாகும்.

மேலாண்மை மேற்கொண்டுள்ள இத்திட்டங்கள் நிறைவேறிடும்போது, எவ்வாறு குலசேகராழ்வார், 'ஸ்ரீரங்க யாத்திரை ஸ்ரீரங்க யாத்திரை' எனும் பேச்சொலிகள் எதிரொலிக்கும் தலத்தினை தெய்வீகமாக எண்ணி வழிபட விரும்பினாரோ, அவ்வகையில் ''திருமலை யாத்திரை திருமலை யாத்திரை'' என்று பக்தர்கள் நாளும் கூறிடும் வகையில் திருமலையின் சிறப்பு பாரெங்கும் பரவிப் பட்டொளி வீசிடும் என்பது உறுதி.

# ✠ செய்திச் சுருக்கம் ✠

## அடிக்கல் நாட்டுவிழா

திருமலையில் வாழும் சேரி வாழ் மக்களைத் திருப்பதிக்கு குடியமர்த்திடும் திட்டத்தின் முதல் கட்டமாக திருப்பதிக்கு அருகே மங்கலம் எனும் கிராமத்தில் 220 வீடுகள் கொண்ட குடியிருப்புக் கட்டிடத்திற்கு ஆந்திர மாநில அறநிலையத்துறை அமைச்சர் திரு. என். எத்திராஜராவ் அவர்கள் அடிக்கல் நாட்டினார். இது போது அவர் பேசுகையில், ஆந்திர அரசும் திருமலைவாழ் மக்களை திருப்பதியில் குடியமர்த்த தன் 'நகர குடியமர்ப்புத் திட்டத்தின்' கீழ் 1000 வீடுகளைக் கட்ட முடிவு செய்துள்ளதாகவும் கூறினார். இது சம்பந்தமாக ஏற்பாடு செய்யப்பட்ட விழாவிற்கு சித்தூர் மாவட்ட ஆட்சித் தலைவர் டாக்டர் ஸ்ரீதர சர்மா அவர்கள் தலைமை வகித்தார்.

தி. தி. தேவஸ்தான பொறுப்பாண்மைக் குழுத்தலைவர் அலுவலகத்திற்கென ரூ. 5 இலட்சம் செலவில் கட்டப்பெறும் அலுவலகக் கட்டடத்திற்கு அடிக்கல் நாட்டப்பட்டது.

## திறப்பு விழா

ரூ. 25 இலட்சம் செலவில் கட்டப்பட்ட தி. தி. தேவஸ்தான திருமண மண்டபம் ஒன்று ஆந்திர மாநில கடப்பையில் ஆந்திர அரசு அறநிலையத்துறை அமைச்சர் திரு. என். எத்திராஜு ராவ் அவர்களால் திறந்து வைக்கப்பட்டது.

## உண்டியில்

24 கற்கள் பதித்த 750 கிராம் எடையுள்ள தங்க வளையல்கள் ஒரு துணியில் சுற்றப்பட்டு பக்தர் ஒருவரால் உண்டியில் போடப்பட்டுள்ளது. இவற்றின் மதிப்பு இன்னும் கணக்கிடப்படவில்லை.

பட்டாம்பூச்சி, தவளை, பல்லி, பாம்பு, தேள் போன்றவற்றின்மாதிரி உருவங்களைக் கொண்ட பன்னிரண்டு பித்தளைப் பொருட்கள் உண்டியில் கண்டெடுக்கப்பட்டுள்ளன.

## புதிய திட்டங்கள்

திருமலையில் ரூ. 2 கோடி செலவில் நான்கு தளங்களைக் கொண்ட 'கடை கட்டடத்தொகுதி' ஒன்று விரைவில் கட்டப்படும்.

ஆந்திர மாநில பீமாவரத்தில் டி. என். கே. கல்லூரியிலும், ஹைதராபாத்திலும் செவிடர் ஊமையர் பள்ளி துவக்குவதென்று முடிவு செய்யப்பட்டுள்ளது.

திருமலையில் ரூ. 98 இலட்சம் செலவில் பொது பேருந்து மைய நிலையம் ஒன்று விரைவில் கட்டப்படும்.

திருமலை புஷ்கரணி நீரினை அவ்வப்போது சுத்தப்படுத்தும் வகையில் ரூ. 25 இலட்சம் செலவில் திட்டம் ஒன்று அமைக்கப்படும்.

## போக்குவரத்து மேலாண்மை மற்றும் பிரயாணிகள் சந்திப்பு விழா

அண்மையில் திருப்பதியில் திருப்பதி பிரிவு ஆந்திர மாநில பேருந்து போக்குவரத்துக்கழக மேலாண்மையும், பொதுப் பிரயாணிகளும் சந்தித்து தங்கள் பிரச்சனைகளைப் பற்றி விவாதித்துத் தீர்வு காணும்வகையில் நிகழ்ச்சி ஒன்று ஏற்பாடு செய்யப்பட்டது. இந்நிகழ்ச்சிக்கு வருகை புரிந்தோரை உள்ளூர் போக்குவரத்துக் கழகத்தின் பிரிவு மேலாளர் திரு. பி. எல். என். மூர்த்தி அவர்கள் வரவேற்க, விழாவிற்கு தி. தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. எஸ். லக்ஷ்மி நாராயணா அவர்கள் தலைமை வகித்தார். திருப்பதி நகர குடியிருப்புத் திட்டத் தலைவர் திரு. எம். வெங்கட்ராம நாயுடு அவர்கள் சிறப்பு விருந்தினராக கலந்து கொண்டார். பிரயாணிகள் பொதுவாக பேசியபோது, பேருந்து கால நேரத்தை சரிவர கடைப்பிடிக்க வேண்டும் என்றும், பேருந்துகளை நல்ல நிலையில் பராமரிக்க வேண்டும் என்றும் குறிப்பிட்டனர். விழாத் தலைவர் அவர்கள் பேசிடும் போது, திருமலைக்கும் திருப்பதிக்கும் உள்ள பிரயாணத் தொகை ஒரே சீரான கட்டணமாக இருக்க வேண்டும் என்றும், வெகு தூரத்திலிருந்து திருமலைக்குச் செல்லும் நீண்ட தூர பேருந்துகளை திருமலைக்கு அனுப்பும்முன் அவற்றின் இயந்திர செயற்பாட்டினை சரிபார்த்தல் மற்றும், ஓட்டுநர்களை மாற்றுவதன் அவசியத்தையும் வலியுறுத்திக் குறிப்பிட்டார். பிரயாணிகளின் புகார்களுக்குப் பதில் கூறியும், போக்குவரத்து மேலாண்மை எதிர்காலத்தில் எடுக்க இருக்கும் திட்டங்களையும் பற்றி விரிவாக, அந்நிறுவனத்தின் திருப்பதி பிரிவு வட்டார மேலாளர் திரு. பிரபாகரராவ் அவர்கள் பேசினார்.



## பாராட்டு விழா

திருப்பதி 'உள்ளூர் மக்கள் அவையினர்' தங்களது இவ்வாண்டு வருடாந்திர விழாவை வெகு விமரிசையாகக் கொண்டாடினர். இது சம்பந்தமாக ஏற்பாடு செய்யப்பட்ட விழாவில் தி. தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. எஸ். லக்ஷ்மி நாராயணா அவர்கள் சிறப்பு விருந்தினராக பங்கேற்றார். இவ்விழாவின் போது, தி. தி. தே. தோட்டத்துறை கண்காணிப்பாளர் திரு. தம்மண்ணா அவர்களை, அவருடைய உன்னதமான தேவஸ்தான தொண்டினைப் பாராட்டும் வகையில், மேற்படி மக்கள் அவையின் சார்பில், தி. தி. தே. பாதுகாப்பு அலுவலர் திரு. எஸ். கிருஷ்ணமூர்த்தி அவர்கள் பொன்னாடைப் போர்த்திக் கௌரவித்தார். இவ்விழாவிற்கு திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத் துணைவேந்தர் டாக்டர் ஜி. என். ரெட்டி அவர்கள் தலைமை வகித்தார்.

# நவராத்திரியில் அம்பாளின் விசேஷம்

'தாயிற் சிறந்ததோர் கோயிலும் இல்லை' என்பதும், 'தந்தை சொல் மிக்க மந்திரம் இல்லை' என்பதும் உயர்ந்த தத்துவங்கள். 'அம்மையே அப்பா ஒப்பிலா மணியே' என்பர் ஞானி. மிருகங்களும், மனிதர்களும் அன்றுடம் அம்மா என்ற சொல் இல்லாத நாளில்லை: திருஞானசம்பந்தப்பெருமான் தனது முதல் பாட்டில் கூட "தோடுடைய" என்று ஆரம்பித்துள்ளார். இதன் உட்பொருள் அம்மை அப்பனுடன் சேர்ந்தமையால் (அர்த்தநாரீஸ்வரர்) சக்தியில்லையேல் இந்தச் சிவமும் இல்லை என்பதை உணர்த்தத்தான். ஆகவே தாயிற்கு முதலிடம் தருவது இவ்வுலகமே ஆகும். அதிலும் நம்மவர்கள் தெய்வத்தைக் கொண்டாடுகின்றபோதும் தாயின் வடிவையே நினைந்து, அமைத்து இன்று வரை வேண்டியதைக் கேட்டு அந்தத் தாயிடம் (அம்பிகை, பராசக்தி,) பெறுகின்றுர்கள்.

குழந்தைகளின் குற்றங்களைத் தாய் மறந்து அணைப்பது போல நம்முடைய குற்றங்களை எல்லாம் மறந்து உலகத்திற்கே தாயாயிருக்கின்ற ஸ்ரீ அம்பாள் நம்மையெல்லாம் உய்விக்கவேண்டி அருளைச் சுரக்கின்ருள். இதனைத்தான் லலிதா சகஸ்ரநாமம் முதலிலேயே "ஸ்ரீ மாத்ரே நம"; என்கின்றது: இதன் பொருள் உலகத்திற்கெல்லாம் தாயே உன் திருவடிக்கு நமஸ்காரம் என்பதாகும்.

**சக்தியின் விளக்கம் :**

சிவம் என்பது மெய்ப்பொருள். சிவம் என்பது சேதனம் (அறிவுப் பொருள்). சக்தி என்பது அசேதனம் (ஜடப்பொருள்). இவை இரண்டும் தனியே இயங்காமல் இணைந்தே இயங்க வேண்டும் என்பது நியதி. ஆதலால்தான் உமாமகேஸ்வரன் என்றும் லக்ஷ்மீ நாராயணனென்றும் பரம்பொருளை வணங்குகின்ருேம்.

உலகத்தைப் பற்றிய உண்மையை விளக்குவது மாயை. இதனை தன்னகத்தே கொண்டு விளங்குபவள் அன்னை பராசக்தி. ஆகவே புக்தி முக்தி ப்ரதாயினி (புக்தி முக்தி ப்ரதாயினி) என்று கூறும்போது போகத்தையும் மோக்ஷத்தையும் அளிப்பவள் அவளே என்கின்றது இம்மந்திரம்.

**தேவியின் ரூபங்கள் :**

முத்தொழில்களைச் செய்யுமிடத்து பிராம்ஹி, வைஷ்ணவி, ருத்ராணி என்றும், காலத்தின் சொரூபமாக இருப்பதால் காளிகா என்றும், வித்தையின் வடிவாக இருப்பதால் ஸ்ரீவித்யா (சரஸ்வதி) என்றும், எல்லா மங்களத்தையும் கொடுக்கும்போது பத்ரகாளியாகவும் (பத்ரம் என்ருல் மங்களம்) அதனையே தனித்தனியாக அருளும்போது லக்ஷ்மியாகவும் பரிணமிக்கின்ருள்.

தேவியின் ரூபங்கள் எண்ணற்று இருப்பினும் திருக்கோயில்களில் மிக உன்னதமாகப் போற்றப்படும் 64 இடங்களில் காட்சியளிக்கின்ருள். ஸ்ரீ ஆதிசங்கரர் சாரதாம்பாளாகவும், ஸ்ரீ மூகாம்பிகையாகவும், ஸ்ரீ காமாட்சியாகவும் வைத்துப் போற்றுகின்ருர்.

ஸ்ரீராம கிருஷ்ண பரமஹம்ஸர் அன்னையை ஸ்ரீகாளியாக நினைத்து அருளைப் பெற்ருர். ஸ்ரீ காளிதாசன் காளியின் அருளால் மகோன்னத நிலையை அடைந்தார். இத்தேவியின் சுந்தர வடிவினையும் திருவிளையாட்டையும் எடுத்துரைக்க வந்த நூல்கள் பல உள்ளன.

**தேவியைப் போற்றும் நூல்கள்:**

வேதங்கள், தேவி மஹாத்மியம், தேவி பாகவதம், மார்க்கண்டேய புராணம், தேவி புராணம், சாக்த தந்திரம், சௌந்தர்யலஹரி, லலிதா சகஸ்ரநாமம், துர்க்கா சகஸ்ரநாமம் அபிராமிசுந்தரி, அபிராமி அந்தாதி, சகலகலாவல்லி மாலை, தாயுமானவர் பாடல்கள், சாக்த மந்திரங்கள் முதலியன.

திரு. S. நாராயணசுவாமி M.A.B.Ed.,
இன்னம்பூர்.

**அம்பிகையின் விழா:**

கிராமங்களிலும், பெரிய நகரங்களிலும் உள்ள ஆலயங்களில் அம்பிகையை பலவாருக வைத்து ஆராதனை செய்து வழிபடுகின்ருர்கள்; ஜகன் மாதாவாக இருக்கின்றவளுக்கு எத்தனை விதமான விழாவாக இருப்பினும் "நவராத்திரி" விழா சிறப்புடையதாகும்.



சிவபெருமானுக்குப் பகல் உத்ஸவம் மிகச் சிறப்புடையதாகும்: ஆனால் அம்பிகைக்கு இரவு உற்சவம் சிறப்பு இருப்பினும் நவராத்திரி காலத்தில் இரவும் பகலும் விசேஷமாகும். நவ- ஒன்பது, ராத்ரி—இரவு என்பதாகும்.

மானிடர்களால் ஆராதிக்கப்பட்டு அனுக்ரஹம் செய்யும் உரிமையை உடையவர்கள் இருவராவர். அவர்கள் பிதிருக்கள் — தேவர்கள். பிதிர் தேவதைகளைத் தவிர மற்ற தேவர்களெல்லாம் சுக்ல பக்ஷ அபிமானிகளாகையால், புரட்டாசி மாதம் சுக்ல பக்ஷத்தில் அவர்களுக்காக நவராத்திரி ஆராதனை செய்யப்படுகிறது.

**நவராத்திரியின் காலம்**

ஸ்ரீதேவியினை ஆராதனை செய்யும் காலத்தில் சித்திரை மாதத்தில் வருகின்ற வஸந்த நவராத்திரி விரதமும் புரட்டாசி மாதத்தில் வருகின்ற பாத்ரபத நவராத்திரி விரதமும் ஆகும். இவ்விரதம் (பூஜை, விழா) புரட்டாசியில் சுக்ல பட்ச பிரதமையில் ஆரம்பித்து தசமியன்று முடிவுறும். இதில் வரும் அஷ்டமி, நவமிக்கு மகாஷ்டமி, மகாநவமி என்பதாகும்.




சித்திரை மாதத்தில் வருகின்ற வஸந்த நவராத்திரியை பூஜிக்கும் தன்மைகளை தேவி உபநிஷதத்திலும் அதர்வண வேதத்திலும் சில பாகங்களால் விளக்கம் செய்யப்பட்டுள்ளது. சித்திரை மாத பௌர்ணமி மட்டிலும் (இரவில்) தேவியை ஆராதனை செய்வதும் ஸ்ரீசண்டி ஹோமம் செய்வதும் உத்தமம் ஆகும். இப்பிரபஞ்சத்தில் இருக்கும் உயிர்களுக்கு உய்வு தரும் பொருட்டு சித்ரா பௌர்ணமியிலும், புரட்டாசி நவராத்திரியிலும் இப்பூமியில் வந்து அருள் சுரக்கின்றாள்.

பகல் பூஜை முழுவதும் ஈஸ்வரனுக்கும் இரவு பூஜை முழுவதும் ஈஸ்வரிக்கும் என்பது நடைமுறையாகும். ஆனால் இந் நவராத்திரியில் பகல், இரவு பூஜைகள் அனைத்தும் ஈஸ்வரிக்கே உரித்ததாகும்.

இந்த நவராத்திரி நாளில் முதல் மூன்று நாளில் அம்பாளானவள் துர்க்கையின் (காளி) அம்சமாகவும் 4, 5, 6ம் நாளில் லக்ஷ்மி அம்சமாகவும், 7, 8, 9ம் நாளில் சரஸ்வதி அம்சமாகவும் ஆராதனை செய்யப்படுகிறாள்.

**சரஸ்வதி பூஜையின் தத்துவம்:**

சக்தியின் உதவியை உண்மையில் நாடுபவன் வல்லவனாகிறான். அத்தகைய வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம். ஆதலால் வல்லவனாகி ஆயுதத்தை ஒழுங்காக உபயோகிப்பவனே ஆயுத பூஜை செய்பவனாகின்றான். அத்தகையவன் வருஷம் ஒரு முறை ஆயுதத்தை அலங்கரித்து வழிபடுவது சாலப் பொருத்தமாகும். நவமியன்று சுவடிகளில் (புத்தகம்) ஆவாஹனம் செய்து சரஸ்வதியை வணங்குவதாகும். எப்படியெனில் உணவு உடலுக்கு உறுதி தருவது போல கல்வியானது உள்ளத்திற்கு உறுதி அளிக்கின்றது. கல்வியே அக்ஞான இருளை அகற்றவல்லது.




ஆகவே தினம் உள் ஒளியை உண்டாக்க வல்லது என்பதனை உணர்த்தவே நவமியன்று கலைமகளை (சரஸ்வதியை) புத்தகங்களில் ஆவாஹனம் செய்து அல்லது சாஸ்திர சம்மந்தப்பட்ட ஓலைச் சுவடிகளில் ஆவாஹனம் செய்து பூஜித்து தசமியன்று-விஜயதசமியன்று விசர்சனம் செய்து பாடம் தொடங்குவர். அன்று தான் வித்தியாரம்பம். அதனை உணர்த்தவே அகிலாண்ட நாயகியின் அனுக்கிரகத்தைப் பெற நம் முன்னோர் கண்ட வழியினை மாசில்லாமல் வணங்குவதேயாகும்.

**தேவியின் ரூபங்கள்:**

முத்தொழில்களைச் செய்யுமிடத்து பிராம்ஹி, வைஷ்ணவி, ருத்ராணி என்ற பேத்தில் போற்றப்படுகின்றாள். சகுணபிரமம் அல்லது ஈஸ்வரனுக்கு ஒப்பாகும் போது அவளுக்கு துர்க்கை என்றும், கால சொரூபிணியாக வடிவெடுக்கும் போது காளியாகவும், வித்தையின் வடிவாக வருகின்ற போது சரஸ்வதியாகவும், தனம், தான்யம் முதலான செல்வங்களாக வடிவெடுக்கும் போது லக்ஷ்மியாகவும் போற்றப்படுகின்றாள்,

**பூஜித்து வழிபட்டோர்:**

இராமபிரான் இலங்கைக்குப் போகும் முன்பு துர்க்கை பூஜை செய்ததாகவும், கண்ணபிரான் காத்யாயினி பூஜை பண்ணி அவளுடைய அனுக்கிரகத்தைப் பெற்றார் எனவும், கூறுவர். முனிவர்களும் இந்திராதி தேவர்களும், நவக்கிரகாதி தேவர்களும், இக்காலத்தில் தோன்றிய ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸர் காளியின் வரப்பிரசாதத்தைப் பெற்றார்கள் என அறிவோம்.

**தேவிக்குப் பிரியமான அனுஷ்டானங்கள்:**

புரட்டாசி, சித்திரை மாதங்களில் வரு நவராத்திரி விரதம், சோம வார விரதம், அநந்ததிரிதியை விரதம், ஆருத்திரா விரதம், செவ்வாய் வெள்ளிக்கிழமை விரதம், ரசகல்யாணி விரதம், பிரதோஷ விரதம், சதுர்தசி விரதம், ரசகல்யாணி அநந்ததிரி தியையோடு கூடிய நாள், ஆருத்திரா திருவாதிரை நக்ஷத்திரத்துடன் திருதியை கூடிய நாள்:

**தேவியின் சிறப்பு விழாக்கள்:**

ஊஞ்சல் உற்சவம், பள்ளியறை உற்சவம், திருப்பள்ளி எழுச்சி, வசந்தோற்சவம், தேவிக்காக நடத்தப்படும் பிர்மோற்சவங்கள், நவராத்திரி உற்சவங்கள், ஆடிவெள்ளி உற்சவங்கள், தை வெள்ளி உற்சவங்கள், தெப்போற்சவங்கள் முதலான விழாக்கள் ஆகும்.

**தேவியின் ஸ்தலங்கள்:**

அகிலாண்டேஸ்வரியுமான ஸ்ரீஅம்பாள் துர்க்கா, லக்ஷ்மி, சரஸ்வதி அம்சமாக இருந்தும் இப்பூவுலகில் பல்வேறு நாமங்கள் ஏற்றும், பல்வேறு அர்ச்சா ரூபங்களை ரிஷிகளாலும், ஞானிகளாலும், சித்தர்களாலும் பிரதிஷ்டை செய்யப்பட்டும், அந்தந்த ரூபங்களை தத்தம் மனத்தில் கொண்டு வழிபட ஸ்ரீபராசக்தி 64 கலைகளின் அம்சமாக 64 இடங்களில் (திருக்கோயில்களில்) மக்களுக்கு இகபர நலங்களை அளித்து வருகின்றாள்: குறிப்பாக காசியில் விசாலாட்சியாகவும், இராமேஸ்வரத்தில் பர்வதவர்த்தினியாகவும், மைசூரில் சாமுண்டீஸ்வரியாகவும், கேரளத்தில் பகவதியாகவும், வங்காளத்தில் காளியாகவும், மதுரையில் மீனாட்சியாகவும், காஞ்சியில் காமாட்சியாகவும் இருந்து வருகின்றாள்.

இதனை விளக்க வந்த தேவி மகாத்மியம் ஸ்ரீ அம்பாளது மகோன்னத விஷயங்களை அழகுபட விளக்கியும், அவளை வணங்கினால்

ஸர்வ மங்கல மாங்கல்யே சிவே
சர்வார்த்த சாதிகே ।
சரண்யே த்ரியம்பகே கௌரி
நாரயணி நமஸ்துதே ॥

எல்லா மங்கலத்தையும் அருள்வாள் என்று இந்த சப்தசதிமந்திரம் கூறுகின்றது. இதனைத்தான் அபிராமி பட்டர்

தனம் தரும் கல்வி தரும் ஒருநாளும்
தளர்வறியா
மனம் தரும் தெய்வ வடிவும் தரும்
நெஞ்சில்
வஞ்சமில்லா இனம் தரும் நல்லன
வெல்லாம் அன்பர் என்பவர்க்கே
கனம் தரும் பூங்குழலாள் அபிராமி
கடைக்கண்களே

என்று கூறியதற்கிணங்க அவள் தாழ் பணிந்து இந்நாளில் இனிது வாழ்வோமாக.



## ஸ்ரீகல்யாண வேங்கடேஸ்வர சுவாமி கோயில் நாராயணவனம்

### தினசரி நிகழ்ச்சி நிரல்

**காலை**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 6-00 | முதல் | 7-00 | வரை | —சுப்ரபாதம் |
| 7-00 | ,, | 8-30 | ,, | —விஸ்வரூப ஸர்வ தரிசனம் |
| 8-30 | ,, | 9-00 | ,, | —தோமால சேவை |
| 9-00 | ,, | 10-30 | ,, | —முதல் மணி, சாத்து முறை |
| 10-30 | ,, | 11-30 | ,, | —ஸர்வதரிசனம் |
| 11-30 | ,, | 12-00 | ,, | —2-வது மணி |
| 12-00 | மதியம் | | | —தீர்மானம் |

**மாலை**

| | | | | |
|---|---|---|---|---|
| 4-00 | ,, | 6-00 | ,, | —ஸர்வ தரிசனம் |
| 6-00 | ,, | 6-30 | ,, | —தோமால சேவை, அர்ச்சனை |
| 6-30 | ,, | 7-00 | ,, | —இரவு மணி, சாத்துமுறை |

**இரவு**

| | | | | |
|---|---|---|---|---|
| 7-00 | ,, | 8-45 | ,, | —ஸர்வ தரிசனம் |
| 9-00 | | | | —ஏகாந்தசேவை, தீர்மானம் |

### ஆர்ஜித சேவை கட்டணங்கள்

| | | |
|---|---|---|
| கல்யாணோற்சவம் | ரூ. | 150-00 |
| ஸகஸ்ரநாம அர்ச்சனை (நபர் ஒருவர்க்கு) | ரூ. | 5-00 |
| அஷ்டோத்ரநாம அர்ச்சனை | ரூ. | 2-00 |
| ஹாரத்தி | ரூ. | 1-00 |
| புளிக்காப்புசேவை (வெள்ளிக்கிழமைகளில் மட்டும்) | | 1-00 |
| அபிஷேகானந்தர தரிசனம் (வெள்ளிக்கிழமைகளில் மட்டும்) | ரூ. | 1-00 |
| தேங்காய் வர்த்தனை | | 0-50 |

# பக்திப் பாடல்களில் நகைச்சுவை!

**முகவுரை:**

எட்டுத் தொகை, பத்துப்பாட்டு, பதினெண் கீழ்க்கணக்கு ஆகிய நூல்களின் தொகுப்புக்கள் மட்டுமின்றி செந்தமிழில் தனிப்பாடல் திரட்டு என்ற நூற் தொகுப்பும் உள்ளது. இதில் பல்வேறு காலங்களில், பல்வேறு புலவர் பெருமக்கள் பாடிய பாடல்கள் ஒரு சேரத் தொகுக்கப் பட்டுள்ளன. இத்தனிப்பாடல் திரட்டில் உள்ள பாடல்கள் அனைத்தும் படிக்கப் படிக்க இன்பம் பயப்பவை.

வேடிக்கையாகவும், சுவையாகவும் அறிவுக்கு விருந்தாகவும் அமைந்துள்ள இப்பாடல்களைத் தொகுப்பித்த பெருமை கி. பி. 19ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சந்திரசேகர கவிராச பண்டிதரைச்சாரும்.

இத்தனிப்பாடல் திரட்டில் கவி காளமேகம் என்ற புலவர் பாடிய பல பாடல்கள் இடம் பெற்றுள்ளன. இவரது இயற்பெயர் வரதன் என்பதாகும். இவர் கும்பகோணத்தருகில் உள்ள நந்தி என்ற கிராமத்தில் பிறந்தவர். இவர் திருவரங்கம் கோயில் மடைப்பள்ளியில் பணியாற்றி வந்தார். மேகம் மழையைச் சரளமாகப் பொழிவதைப் போலப் பாடல்களைச் சரளமாகப் பாடியதால் காளமேகம் என அறிஞர்கள் பலரின் பாராட்டுதலைப் பெற்றார் எனக் கூறுவர். இவர் பாடிய பக்தியில் நகைச்சுவைப் பாடல்கள் சிலவற்றை இனிக் காண்போம்.

**பக்திப் பாடல்கள்:**

கவி காளமேகம் பல பக்திப் பாடல்களைப் பாடியிருக்கிறார். ஆயினும் அப்பாடல்கள் நகைச் சுவையுடன் அமைந்திருப்பது சிறப்பாகும். சிவன் பெருமையைக் குறித்து அவர் பாடியுள்ள ஒரு வெண்பாப் பாடலாவது:

ஓ, கா, மா, வீ தோ, வுரைப்பன்
டு. டு. டு. டு. டு.
நாகார் குடந்தை நகர்க்கதிபர்—வாகாய்
எடுப்பர் நடமிடுவ ரேறுவ ரன்பர்க்குக்
கொடுப்ப ரணிவர் குழைக்கு.

சிவபெருமானைக் குறித்துப்பாடிய இப்பாடலில் பொருளைப் புரிந்து கொள்வது சற்று கடினமாகத் தோன்றும்; ஆனால் முதல் வரியின் கடைசியிலுள்ள ஐந்துடுவையும் ஓ, கா, மா, வீ, தோ, வோடு சேர்த்தால் பொருள் விளங்கிவிடும். ஓ + டு = ஓடு, கா + டு = காடு, மா + டு = மாடு, வீ+டு=வீடு தோ+டு=தோடு. இந்த ஐந்து சொற்களையும் பின்வரும் ஒவ்வொரு சொல்லின் முன் வைத்துப் பார்த்தால் பொருள் விளங்கிவிடும். பக்தர்கள் வாழும் கும்பகோணம் என்ற ஊருக்குத் தலையாக விளங்கும் கோயிலுக்குள் சிவபெருமான் கோயில் கொண்டுள்ளார்; அழகாய் சிவன் கையில் ஏந்துவது மண்டை ஓடு. அவர் நடனமாடுமிடம் பிணம் சுடும் காடு. அவர் வாகனமாக ஏறிச் செல்வதோ காளை மாடு. அவர் தன்னை வணங்குமடியவர்களுக்களிப்பது வீடு; ஒரு காது குண்டலத்துக்கு மாறாக மறு காதில் அணிவதோ தோடு. நுணுகிப் பார்த்தால் தான் சிவபெருமானின் திருக்கூத்தைச் சிறப்பித்து நகைச்சுவையுடன் பாடியிருப்பதை இப்பாடல் வாயிலாக அறிய முடியுமல்லவா?

சிவபெருமானின் சிறப்பைக் குறித்துக் கவி காளமேகப் புலவர் பாடிய மற்றொரு வெண்பாப் பாடலைக் காண்போம்:

அரையின்முடிமி லணிமார்பி
னெஞ்சில்
தெரிவையிடத் தமர்ந்தான் சேவை—
புரையறவே
மானார் விழியீர் ம, ல, ர, ண,
வொற்றிற்கும்
ஆனால் நா, நீ, நூ, நே.

இப்பாடலைப் படித்து மேற்போக்காகப் பொருள் பார்த்தால் விளங்காது. முதல் இரண்டு வரிக்கும் மூன்றாவது, நான்காவது வரிகள் உயிர் போல் உள்ளன; எப்படியென்று பார்ப்போம். இறுதி வரியிலுள்ள நா, நீ, நூ, நே என்ற ஒவ்வொரு எழுத்தோடும், மூன்றாவது வரியிலுள்ள ம, ல, ர, ண என்கின்ற உயிர் மெய்யெழுத்துக்களை ஒற்றெழுத்துக்களாக மாற்றி (ம், ல், ர், ண் என மெய்யெழுத்துக்களாக்கி) எதிர் நிரல் நிறையில் இணைத்துப் பார்த்தால் பொருள் விளங்கிவிடும். நேம், நூல், நீர், நான் என்ற சொல்லமைப்பை முதலிரண்டு வரிகளோடு சேர்த்துப் படித்தால் தெளிவான பொருள் கிடைக்கும்; அதாவது நெஞ்சோடு நேயம், அணி மார்போடு நூல், திருமுடியில் நீர், அரையில் நான் என்பதாகும். மானை யொத்த விழியுடைய பெண்டிரே! கேளீர்;

புலவர். மு. மணி எம்.ஏ.-வேலூர்.

சிவபெருமான் தன்னுடைய நெஞ்சிலே பக்தர்களுக்காக அன்பை வைத்துள்ளார். (பாடலில் நேயம் என்பது இடைக்குறையாக நேம் என்று வந்துள்ளது) அவருடைய அழகிய திருமார்பில் பூணூலை அணிந்துள்ளார். அவர் திருமுடியின்மேல் கங்கையை அணிந்துள்ளார். அவர் அரையில் நாணை (பாம்பை) உடையாக அணிந்துள்ளார். உமாதேவியை இடப் பாகத்தில் வைத்துள்ளார். குறையின்றி காளை வாகனத்தில் அமர்ந்துள்ளார் என்பது பாட்டின்

(41-ம் பக்கம் பார்க்க)

# ஸ்ரீ வைஷ்ணவர்கள் ஒற்றுமை நன்னூல்

திருவுடைய உபயவேதாந்த சபை ஒன்று பெங்களூரில் உண்டு. அது ஸ்ரீ வைஷ்ணவர்களின் ஓர் இருப்புக் கோடான வகையை அறிந்து தன் துடிப்பாலே நம்மை ஓர் உதவிச் செயலிலே மூட்டியிருக்கிறது.

அதாவது மனிதருடைய ஓர் கூட்டு வாழ்க்கையை அடித்து முறித்து மடக்குகிற சில குற்றங்களை நல் வைத்தியர்கள் போன்ற வித்வான்கள் ஆராய்ந்து அவைகளை அடக்கவும் போக்கவும் தகுந்த கடுமையான மருந்து ஒன்றைக் கொடுக்க முயற்சி செய்ய வேண்டியிருக்கிறது அல்லவா.

இப்பொழுது நம்முடைய தேசிகர்கள் எல்லாம் ஒப்புக் கொண்டிருக்கிற திருவைணவக் கலையிலே நமக்குத் தூய்மையுள்ள ஆர்வம் பிறந்தால் ஸ்ரீ வைஷ்ணவ நன்னூல்களின் நேரான உட்கருத்துக்களின் இனிப்பு எங்கும் நிரம்பிக் கிடக்கும்.

ஸ்ரீ வைஷ்ணவ தரிசனம் என்பது எல்லோர்க்கும் தெரிந்த நல்படியே எப்பொழுதும் அழிவும் நழுவுமில்லாத திடமாய் விளங்கா நின்று கொண்டிருந்தாலும் ஒன்றாய் இருந்த மனிதர் சில கேடளிப்பவர்களால் இக்கரையும் அக்கரையுமாய் பிரிந்து போய் துன்பப்பட நின்றாரே:

ஆகையால்:

நரங்கலந்த அரியுருவாய் திருவும்
சேர்ந்து
பிரிவின்றி உறவுடன்தான் எல்லாம்
கொண்டு
அறிமுகமாய் எங்கும் தான் எவ்
வோர்க்கு என்றும்
குறுமுகமாம் அச்சுதனை அடைகின்
றோமே:

ஒரு நாளும் மறுத்துப் பேசாத ஆசாரியர்கள் கூறியுள்ள விளக்குப் போன்ற நன்னூல்களை நன்மனத்தால் கேட்காமலும் அறிந்து கொள்ளாமலும் சிலர் தான் தோன்றியாகவே சொல்லுகிறார்களே. அவர்களையும் ஒரு நல்லோர் என்றே உலகம் கொள்வதே.

ஆகையால் இப்பொழுது பின் கூறுபவைகளை நாம் அவசியமாக அறிந்து தரிசிக்க வேண்டும்:

1. ''தன்னையடைய தான் ஒருவனே காரணமாக இருக்கிறவன் பகவான்'' என்கிற ஒரேர்தட்புமில்லாத வள்ளலான ஒரு நூல் ஸ்ரீ வைஷ்ணவான எல்லோருடைய கழுத்திலும் அமைந்திருக்கிறதுதான்.

2. ''தன்னைத் தான் ஒருவனே ஆண்டுக் கொள்ள வேண்டிய பகவான் ஒருவன்தான் மற்றெல்லாப் பொருள்களுக்கும் அடியும் அரசுமாக நின்றவன். உலகத்தில் சிற்சில பொருள்களுக்குக் காரணமாகக் காணப்படுகின்ற மற்றைப் பொருள்களும் பகவான் நடத்த நடை பெற்றிருப்பதால் கொண்ட அடிகளாருமே தவிர உண்மையானவடிகள் அன்று''. இதுதான் நல்லோர்கள் கொண்ட கருத்தொன்று.

3. ஒவ்வொரு உடம்புகளும் தம் தாம் உயிரொன்றைக் கொண்டுதான் தன்மையையும் தன் குணங்களையும் தன் வாழ்க்கையையும் படைத்திருக்கின்றன. இப்படியே உலகத்திலுள்ள அறிவில்லாத எப்பொருள்களும், அறிவுள்ளவை என்பதான உயிர்களும் உட்கொண்டு எல்லாமே பகவானான நாராயணனுக்கு ஓர் உடம்பாய் கிடக்கிறது. இதுதான் ''சாரீரகம்'' என்கிற உடம்புமுறை: இதுதான் ஸ்ரீ வைஷ்ணவர் அனைவருக்கும் முக்கியமான ஒரு அடி நூல்.

4. தென்கலையார் என்று சொல்லிக் கொள்ளும் அவர்களுக்குத் தெள்ளியதான திவ்யப் பிரபந்தம் என்கிற தமிழ் நன்னூல் கலையில் உட்புகுந்து அறிவு பெற்ற தன்மையொன்று அவசியம் இருக்கவேண்டும். இது அவர் தலைச் சிறப்பு.

வடகலையாரென்று சொல்லிக் கொள்ளுபவர்களுக்கு வடமொழி தேற்றமான விசிஷ்டாத்வைதம் என்கிற வேதாந்தத்திலும் உட்புகுந்து

---


ஸ்ரீ ராமசர்மாராமானுஜ தாஸர்
திருநாராயணபுரம் அரையர்.


---

அறிவு பெற்ற தன்மையொன்று அவசியம் இருக்கவேண்டும். இது அவர்கள் தலைச்சிறப்பு.

தென்மொழி வடமொழிகள் இரண்டும் இருவர்க்கும் அவசியம் இருக்க வேண்டியவை. இவ்விரண்டுடைய கூட்டத்தில் ஏற்றக்குறைகள் இல்லையென்பது ''உபய வேதாந்தப் பிரவர்த்தகாசார்யர்'' என்கிற ஒரு முக்கியமானத் தலைப்பாலும் திருக்கோயில்களில் இருவர்க்கும் ''இயல் ஸ்ரீ வைஷ்ணவாள்'' என்று ஒரொன்றே அருள்பாட்டிருக்கையாலும் தேறும் நற்பொருள் ஒன்று. ஆகையால் தென்கலை வடகலையென்கிற வேற்றுமை நல்லடியில்லாதது.

5. பிரபன்ன ஜன கூடஸ்தரான நம்மாழ்வார் அடியாக வந்த நாதமுனி ஆளவந்தார் எம்பெருமானார் முதலானவர்கள் தென்கலையார் வடகலையார் எல்லோருக்கும் முதலி

களாய் அவர் வழியாக மூன்று ரகசியங்களைக் கொண்டு ஸ்ரீ வைஷ்ணவ தீக்ஷையுள்ளவர் இவ்வெல்லாருமே என்பது இவ்வெல்லோரும் ஒப்புக்கொண்ட விஷயம்.

6. திவ்யசூரிகள் என்கிற பன்னிரண்டு ஆழ்வார்களும் அவர்கள் அருளிச் செய்த திவ்ய பிரபந்தங்கள் என்கிற நாலாயிரப் பாசுரங்களும் நூற்றெட்டு திவ்ய தேசங்களும் அங்குள்ள எம்பெருமானுடைய திவ்யமான அர்ச்சாவதாரத் திருமேனிகளும் இருவர்க்கும் ஒருநாளும் தனியாகப் பிரிந்ததில்லை.

7. திருநாரணனுடைய திருவடிகளாக திருநெற்றியில் ஏற்றிக்கொள்கிற வெள்ளைத் திருமண் காப்பும் அதன் நடுவில் எம்பெருமான் திருமேனியிற் திருமஞ்ஜனமாய் வந்த செம்மஞ்சலான திருச்சூர்ணக் காப்பும் எல்லா ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கும் ஒன்று. இதில் பீடத்தை அடக்கி இடுவதும் நீட்டி இடுவதும் ஒரு சிற்பக்கலையாக மட்டும் இருக்குமொழிய தத்துவமான வேற்றுமையன்று என்று கொள்ளவேண்டும்.

8. ஐயங்கார் என்கிற சிறப்புடைய கூட்டப்பெயர் ஒன்று ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு விசேஷமாய் விளங்குகிறது. ஐந்து அம்சங்கள் உட்கொண்ட சிற்சில தத்துவங்களும் அவையடியாக விளங்குகிற சிற்சில நன்னடைகளும் அமைந்திருக்கிற இவர்களை ஐந்து அங்கமுள்ளவர்கள் என்கிற பொருளடியாக ஐயங்கார் என்று கொள்வது நன்றாகத் தகும்.

அஃதாவது:

1. பகவானுடைய ஐந்து ஆயுதங்களால் அவர்களுக்குத் திருக்காப்பொன்று விசேஷமாய் உண்டு.

2. அல்லது ஐந்து ஆயுதங்களைக் கொண்டிருக்கும் பகவானுக்கு இவர்கள் ஒரு அங்கமாய் இருக்கிற தம் இருப்பை அறிந்தவர்கள்; இங்கு அங்கம் என்றால் உடம்பு என்று கருத்து.

3. சங்கு சக்கரங்களின் திருவிலச்சினைகளும் திருமண் காப்பும் இராமானுச தாஸன் முன்னான தாஸ்யத்திருநாமமும் திருமந்திரம் உட்கொண்ட மூன்று ரகசியங்களை உபதேசமாய்க் கொள்ளுகையும் ஆசார்யனையும் பாகவதர்களையும் உட்கொண்டு எம்பெருமானை தினந்தோறும் ஆராதித்துக் கொண்டு போருகையுமாக இவ்வைந்தும் ஸ்ரீ வைஷ்ணவத்துக்கு அடிப்படையான ஸம்ஸ்காரங்கள்.

4. எம்பெருமானார் தரிசனம் என்றே புகழ் பெற்ற ஸ்ரீ வைஷ்ணவத்தில் ஒருவர் இருவர் என்றில்லாமல் நான்காறு ஆசார்யர்களும் பலப்பல நற்பொருள்களையும் நன்னடைகளையும் காட்டிக் கொடுப்பவர்கள் ஆகையாலும் எம்பெருமானார்க்கும் இப்படியே ஐந்து ஆசாரியர்கள் அமைந்திருந்ததாலும் ஸ்ரீ வைஷ்ணவர் எல்லோருமே ஐந்து குருக்களையுடையவர்கள் என்று கொள்ளலாம்.

5. ஆசார்ய நிஷ்டையென்பதொன்று தென்கலையார் வடகலையார் எல்லோர்க்கும் முக்கியமான உபாயமாய் உபாயங்களில் ஐந்தாவதாக விளங்கா நின்றது. இதை "ஆசார்யாபிமானமே உத்தாரகம்" என்றும் "ஆசார்யா திஹ தேவதாம் ஸமதிகாம் அன்யாம் ந மன்யாமஹே' என்றும் வைணவ குருக்கள் எல்லோரும் கூறியிருக்கிறார்கள்.

6, 7. பரம், வியூஹம், விபவம், அந்தர்யாமித்துவம், அர்ச்சையென்கிற ஐந்து உருவத்தன்மைகளையுடையனான பகவான் ஒருவனை ஐந்து காலங்களில் தினந்தோறும் ஆராதிக்க வேண்டிய கடமையொன்று ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கெல்லாம் உண்டாயிருக்க வேண்டியது.

8, 9. குலந்தாங்கு சாதிகள் நான்கிலும் கீழ் இழிந்ததில்லாமலே அந்நான்கிலுள்ளடங்கியிருந்தும் அர்த்த பஞ்சக ஞானத்தாலே ஐந்தாம் உயர்ந்த தன்மையொன்றையடைந்து விளங்கா நின்றவர்கள் வைணவங்கள். இந்தத் தன்மையால்தான் இவர்கள் "பாகவதர்" என்றும் 'தொண்டக்குலம்' என்றும் உண்மையான திருநாமங்களை அமைத்துக் கொண்டிருக்கிறார்கள். இப்படி குலம் தாங்கு சாதிகள் நான்கிலுமிருந்தே ஐந்தாம் திருக்குலமாக இவர்கள் வாழ்க்கை இருக்கிறது.

10. வேதங்கள், ஆகமங்கள், இதிகாச புராணங்கள், யோகம் முன்னான சாஸ்திரங்கள், திவ்யப் பிரபந்தங்கள் என்கிற ஐந்து பிரமாணங்கள் இவர் சித்தாந்த நிலைக்கு அடிப்படை அடையாளங்கள். இவைகள் வழியால் ஐந்து வகையான பகவானுடைய உருவங்களை அனுபவிக்கத் தகும்.

இப்படி முக்கியமான எட்டு நன்னூல்களை முறுக்கி வைத்தால் பகவான் ஒருவனே சித் அசித் ஈச்வரர்கள் என்கிற முக்கூட்டத்திலும் தேறின ஒரு திருநூல் என்பதை அறிந்து அந்த திருவேங்கமுடையானை அடைந்தால் நம்முடைய தாமரை போன்ற இதயமாவது நன்றாக அலர்ந்து அதுக்குள்ளே வைணவம் என்கிற திருவானவள் விளையாடும்படியாகும்.

இந்த நன்னூல் கருத்துக்களையே ஒவ்வொரு வகையால் நம் ஆசார்யர்கள் அமைத்துக்கூறியிருக்கிறார்கள். அதில் நம் வேதாந்த தேசிகர் கூறியுள்ளதொன்று அழகாய் அமைந்திருக்கிறது.

அதாவது:

1. 'சாரீரகம்' என்கிற உண்மையான வேதாந்தமல்லது வேறொரு சாஸ்திரம் தனியாக இல்லை.

2. திருநாரணனைத் தவிர்த்து வேறொரு உயர்ந்த தத்துவமில்லை.

3. பக்தர்களைத் தவிர்த்துவேறொரு தூய்மை யளிக்கும் பொருள் இல்லை.

4. பக்தர்கள் விரும்பியிருக்கிற இடங்களே திருப்பதிகள்; பக்தர்

## தி. தி. தேவஸ்தானத்தாரின்

# ஸ்ரீ பத்மாவதி தாயார் திருகோயில், திருச்சானூர்

## தினசரி நிகழ்ச்சி நிரல்கள்

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 5-00 | முதல் | 5-30 | வரை | —சுப்ரபாதம் |
| 5-30 | ,, | 6-00 | ,, | —ஸகஸ்ரநாம அர்ச்சனை ரூ.6-00 (நான்கு நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்) |
| 6-00 | ,, | 6-30 | ,, | —சுத்தி—முதல்மணி |
| 6-30 | ,, | 11-30 | மதியம் | —ஸர்வதரிசனம் |
| 11-30 | ,, | 12-00 | ,, | —சுத்தி, 2-வது மணி |
| 12-00 | ,, | 6-00 | மாலை | —ஸர்வதரிசனம் |
| 6-00 | ,, | 6-30 | ,, | —சுத்தி, 3-வது மணி |
| 6-30 | ,, | 9-15 | இரவு | —ஸர்வதரிசனம் |
| 9-15 | ,, | 9-30 | ,, | —சுத்தி, ஏகாந்தசேவை |

காலை

### வெள்ளிக்கிழமைகளில்

| | | | | |
|---|---|---|---|---|
| 9-00 | ,, | 10-00 | ,, | —அபிஷேகம் (ரூ. 100/- செலுத்தி இரு நபர்கள் பங்கேற்கலாம்) |
| 9-00 | ,, | 10-00 | ,, | —அபிஷேக தரிசனம் (ரூ.2/. நபர் ஒருவருக்கு) |

## ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

1 தரிசனம்—சிறப்பு நுழைவுக் கட்டணம் ரூ. 2/- (நபர் ஒருவர்க்கு)

**ஆர்ஜித நைவேத்தியங்கள்**

| | | |
|---|---|---|
| (அ) பொங்கல் | | ரூ. 55/- |
| (ஆ) புளியோரை | ,, | ரூ. 50/- |
| (இ) தத்யோதனம் | ,, | ரூ. 40/- |
| (ஈ) கேஸரிபாத் | ,, | ரூ. 85/- |
| (உ) சர்க்கரைப் பொங்கல் | ,, | ரூ. 65/- |
| (ஊ) தோசை | ,, | ரூ. 35/- |
| (எ) ஸாகரபாத் | ,, | ரூ. 90/- |
| (ஏ) ஸீரா | ,, | ரூ.155/- |

**ஆர்ஜித சேவைகள்**

(அ) திருச்சி உற்சவம் ரூ. 63-00
(ஆ) யானை வாகனம் ரூ. 32-00
(இ) தோலோற்சவம் ரூ. 150/- (வெள்ளிக்கிழமைகளில் மட்டும்)
(ஈ) திருப்பாவாடை ரூ. 2000/- (கிருஹஸ்தர்க்கு 5 கிராம எடையுள்ள வெள்ளி டாலர் கொடுக்கப்படும்)

(அர்ச்சனை (அஷ்டோத்ரம்) செய்ய விரும்பும் பக்தர்கள் அதற்கான ரூ.1-50 க்கான டிக்கெட்டினை கோயிலிலேயே வாங்கிக் கொள்ளலாம். இதுபோது பக்தரின் 'பெயரும்' கோத்ரமும் வாசிக்கப்படும்)

* திருப்பதியிலிருந்து 5 கி.மீ. தொலைவிலுள்ள திருச்சானூருக்குப் போய்வர பேருந்து வசதியுண்டு.

கள் விரும்பி நடத்தின நடையே சம்பிரதாயம். பக்தர்கள் விரும்பின படியே தத்துவகுணம் நிலை நிற்பது. பக்தர்கள் விரும்பின சொல்லடிகளே திருமந்திரங்கள். இவைகளைத் தவிர்த்து இவ்வகைப் பொருள் வேறொன்றில்லை.

5. சண்டை கூசல் முதலானவை களுக்குக் காரணமான 'ரஜஸ்' 'தமஸ்' என்கிற குணங்களை அடக்கிப் போகட்டு ஞானம் முதலான நற்குணங்களுக்குக் காரணமான 'ஸத்வம்' என்கிற குணம் தலையெடுத்திருப்பதே உடம்புக்கும் மனத்துக்கும் உயிர்க்கும் ஒரு பிணியில்லாமையாக அமையும் என்பதைத் தவிர மற்றொரு பிணியின்மையில்லை.

6. ஒரு நன்ஞானமுண்டாக வேண்டுமானால் அறிவும் ஆசாரமும் அமைந்துள்ள புலவரான ஆசார்யர்களுக்கு நாம் பணிசெய்து போக வேண்டும் என்பதைத் தவிர வேறொரு உபாயம் இல்லை.

7. பெறு வீடுபேறு என்கிற 'மோட்சம்' என்பதைத் தவிர உலகத்தில் வேறொரு உயர்ந்த இன்பமானது இல்லை.

8. பகவானை அடைய பகவான் ஒருவனே உபாயம் என்கிற பொருளை அளிக்கிற 'த்வயம்' என்கிற சரணாகதி மந்திரத்தையொழிய உய்வதற்கு வேறொரு வழியில்லை.

சிற்சில ஸ்வரூப விசேஷங்களும் உருவத்தன்மைகளுமாக ஒரு சாமான்யத்தில் அடங்கியிருப்பதால் நாம் இங்கு தத்துவத்தைத் தனியாக எடுத்து சிஷ்யர்களுக்காகக் காட்டினேம். தத்துவங்களைப் பிரித்து வகுத்துக்காட்டுவதும் சிஷ்யர்களுக்கு ஓர் உபகாரமாக வேண்டுமேயொழிய அவர்கள் கெடவன்று.

இப்படி பகவானும் பக்தரும் ஆசார்யர்களுமாக ஒப்புக் கொண்டிருக்கிற நல் கருத்துக்களையே அடியேனுடைய இந்நூல்கள் கொண்டிருப்பதாலும் பல வைணவர்களை ஒன்றுக்குமதான இக்கருத்துக்களையும் கொண்ட இந்த 'பகவான் ஒருவனே உபாயம்' என்று ஒற்றிருக்கும் நன்னூல் ஒன்றை எல்லோரும் எடுத்து தம் கழுத்தில் ஆபரணமாக பூண்டு கொள்வது என்று விண்ணப்பம். ★

# மானம் காத்த கண்ணன்

திருமாலின் பத்து அவதாரங்களில் ஒரு அவதாரமாகத் தோன்றியவன் கண்ணன். கொடியவன் கம்சனைக் கொன்று நீதியை நிலைநாட்டியவன் கண்ணன். மகாபாரதத்தில் தனது அறிவின் திறத்தாலும், புத்திக் கூர்மையாலும் அநீதியை அழித்து நீதியை நிலைநாட்ட பாண்டவர்களுக்கு உதவி அவர்களை வெற்றியென்ற அரியணையில் அமர்த்தியவன் கண்ணன். பாஞ்சாலிக்கு சோதனை வந்தபோது அவளது மானத்தைக் காத்த உத்தமன் இந்தக் கண்ணன்.

இவ்வாறு பலவகைப் புகழுக்கும் உரிய கண்ணன்மீது தீராப் பழியொன்று உண்டு. அந்தப் பழி மக்களால் இன்றும் பேசப்பட்டு வருகிறது. ஓவியர்கள் கூட அந்தப் பழியை நிலைநிறுத்தும் வண்ணம் ஓவியங்களை வரைகிறார்கள்:

அந்தப் பழி என்னப் பழி? அது எந்த வகையில் மக்களால் பேசப்படுகிறது? அதை எந்த அளவில் ஓவியர்கள் பயன்படுத்திக் கொள்கின்றனர்? என்பதைப் பற்றி இனிக் காண்போம்.

யமுனை ஆறு வற்றாத வளம்மிக்க ஆறு. நறுமணமுடைய அகன்ற தூய்மையான ஆற்றங்கரையை உடையது: அந்த ஆற்றில் ஆயர் மகளிர் நீராடுவதற்காகத் தங்களது ஆடைகளையெல்லாம் களைந்து ஆற்றங்கரையில் வைத்துவிட்டு நீராடினர்.

ஆயர் மகளிர் நீராடிக் கொண்டிருந்தபோது கண்ணன் அங்கு வந்தான். ஆற்றங்கரையில் வைக்கப்பட்டிருந்த அவர்களது ஆடைகளை கண்ணன் அபகரித்துக் கொண்டு குருந்த மரத்தில் ஏறி அமர்ந்து கொண்டான். தங்களது ஆடைகளைக் காணாமல் தவிக்கின்றனர். குருந்த மரத்தின்மீது கண்ணன் ஆடைகளையெல்லாம் வைத்துக் கொண்டு அமர்ந்திருந்தான். அவனிடம் ஆடையைத் தரும்படி ஆயர்மகளிர் வேண்டினர்.

இப்படிப்பட்ட ஒரு நிகழ்ச்சியைத் தான் ஓவியர்கள் ஓவியமாக வரைந்து மக்களிடத்தில் கண்ணன் ஆடையைத் திருடியவன் என்ற அவப்பெயரை ஏற்படுத்தியுள்ளார்கள்.

இது கண்ணனுடைய லீலைகளில் ஒன்று என்றும் கூறுவர். செவ்வழியாகவும் செத்திர வாயிலாகவும் பரவிய இந்நிகழ்ச்சி இடைக்கால இலக்கியங்களில்கூட சான்று பெறத் துவங்கியது.

சிறு வயதில் ஆயர் மகளிரின் ஆடையைக் கவர்ந்து அவர்களது மானத்திற்கு பங்கம் செய்த தவற்றிற்காகத்தான் திரௌபதிக்கு ஆடை தந்து பிராயச்சித்தம் செய்தான் கண்ணன் என்றும் புராணிகர்கள் கூறுகின்றனர்.

ஆனால் உண்மை நிலை என்ன என்று ஆராய்ந்து பார்க்க வேண்டும். திருமாலின் அவதாரமான கண்ணன், மக்களின் குறைகளைப் போக்கவே தோன்றிய கண்ணன், அக்கிரமத்தை எதிர்த்துப் போராடி தர்மத்தை நிலைபெறச் செய்ய உதித்த கண்ணன், அநியாயத்தைத் தகர்த்தெறிந்து நியாயத்தை நீக்கமற எங்கும் பரப்ப வந்த கண்ணன், இச்செயலைச் செய்திருப்பானா? இதற்கு பழமையான சான்று எங்கேனும் உண்டா? என்றெல்லாம் எண்ணத் தோன்றுகிறது.

சங்க இலக்கியமான அகநானூற்றில் கண்ணனைப் பற்றிய இச்செய்திக்கு முற்றிலும் மாறுபட்டதாக விளங்குகிறது. கண்ணன் குருந்த மரத்தில் இருந்து ஆயர் மகளிரின் மானத்தைத்தான் காத்தானேயன்றி, மானப் பங்கப்படுத்தவில்லை என்ற செய்தியைத் தருகிறது.

மதுரை மருதன் நாகனார் என்ற தமிழ்ப் புலவர் பாடிய பாடல்தான் அது. அகநானூறு களிற்றுயானை நிரையில் 59ஆம் பாடலாக இடம் பெற்றுள்ளது. இதில் கண்ணனைப் பற்றிய செய்தி எவ்வாறு விளக்கப்படுகிறது என்பதை இனிக் காண்போம்.

புலவர். இரா. வெங்கட்டராசன் எம்.ஏ.
சீலநாயக்கன்பட்டி.

தலைவன் பொருள் தேடுவதற்காகத் தலைவியைப் பிரிகிறான். அவன் பிரிந்து சென்றதால் தலைவி கலங்கினாள். கண்ணீர் உகுத்தாள். உடல் வருத்தினாள். தலைவன் நினைவால் துவண்டாள். அவளது மெய் வருத்தத்தையும், மனவருத்தத்தையும் போக்கத் தோழி அவளைத் தேற்றுகிறாள். அதுபோது தோழி தலைவியிடம் கண்ணன் பற்றிய செய்தியை உவமை வாயிலாகக் கூறுகிறாள். அதனை இனிக் காண்போம்.

ஆயர் மகளிர் யமுனை யாற்றிலே குளித்துவிட்டு கரையேறிய அவர்கள் ஆடையின்றி இருந்த நிலையை நீக்க, அவர்கள் மானங் காப்பாற்ற கண்ணன் குருந்த மரத்தை வளைத்துத் தழையாடையைத் தந்து அவர்களது மானம் காக்க உதவவில்லையா? அது போல நம்மை விட்டுப் பிரிந்த தலைவனும் திரும்பி வந்து உனக்கு உதவுவார்.

39 ம் பக்கம் பார்க்க)

அரிதரிது மானிடராய்ப் பிறத்தலரிது. அதிலும் மக்கள் சேர்ந்து வாழ்வது சிறந்த வலிமையாகும். கூட்டு வாழ்க்கை நடத்துவது குவலயத்தில் சிறந்த வாழ்வாகும். சான்றோர்கள், சிறந்த துறவிகள் உறவுடன் மக்கள் ஒருவருக்கொருவர் உதவி செய்து வாழ்வது கடமையென உணர்ந்தார்கள். இறைவனால் படைக்கப்பட்ட பொருள்களைப் பார்க்குங்காலத்து ஆசை வந்து விடுகிறது. அந்த ஆசையை அறவே விட்டொழித்தால் பேரின்பம் கிட்டுமெனவும் மக்கள் உணர்ந்தனர். பற்றற்றான் பற்றினைப் பெற விழைந்தனர். திருவள்ளுவரும், 'பற்றுக பற்றற்றான் பற்றினை' என்று கூறியுள்ளார்.

# நவராத்திரி

பிறவியின் பயனே பற்றற்றான் பற்றினைப் பற்றுவதுதான். அவ்வாறு பற்றுவிடின் நாம் பெறும் மறுமைப் பயன்கள் பலவாம். பலவாறு பரம்பொருளைப் போற்றித் துதிக்கும் நாம் விழாக் காலங்களில், பண்டிகை நாட்களில் ஒருமித்த நிலையிலே, ஒருமைப் பாட்டுணர்வினிலே கலந்துறவாடி மகிழ்கிறோம். பெண்களுக்காகவே கொண்டாடப்படும் விழா நவராத்திரித் திருவிழாவாகும். எல்லாரும் மகிழ்வுடன் கலந்து வழிபடுகின்ற விழாவானாலும் பெண்களே பெரும் பங்கு வகிக்கும் விழா நவராத்திரித் திருவிழாவாகும்.

மனிதனாகப் பிறந்தவன ஒவ்வொருவனுக்கும் கல்வி, செல்வம், வீரம் அவசியம் வேண்டும். இவைகளில் ஏதேனுமொன்று இல்லையென்றாலும் வாழ்வில் ஒளி இராது. கல்வி, வீரம், செல்வம் முதலியன பெற்றவன தேவருலகினும் மேம்பட்ட நிலையில் வாழ்பவனாவான். ஆன்றோர் மூன்று பொருட்களுக்கும் மூன்று தலைவிகளைப் படைத்தனர். கல்விக்கு அதிபதி கலைமகள். செல்வத்துக்கு அதிபதி திருமகள். வீரத்துக்கு அதிபதி துர்க்கை. இவர்களைத் தெய்வங்களாகக் கொண்டு வழிபாடு செய்து வருகிறோம்.

பெண்ணின் பணியைப் பற்றிச் சிந்தித்தால் மகத்தான தென்பதில் ஐயமில்லை. கடமையும், பொறுப்பும், ஆற்றலும் ஆடவரைக் காட்டிலும் பெண்டிர்க்கே மிகுதி. பெண்ணானவள் மைந்தனை ஈன்றளிப்பதோடு நின்றுவிடவில்லை. அவனுக்குக் கல்வியறிவூட்டிச் சான்றோனாக்குகிறாள். உணவு வகைகள் அளிப்பதன் மூலம் வீரனாக்குகிறாள். வருவாயுள் வாழ்வைக் கழித்து வளமான வாழ்வினை அமைத்துக் கொடுக்கிறாள். பெண்மையின் சக்தி தான் என்னே! மென்மைக் குணம் படைத்தவள் தான் பெண்; என்றாலும் வீரம் இல்லாமல் போகுமா? ஒரு காலும் போகாது.

நேற்று வரை பசுவைக் கண்டு பயந்து ஓடியவள்; பொம்மையைத் தூக்கியெறிந்து விட்டு ஓடியவள்; பாலுந்தேனும் பருகச் சொன்னால் அழுபவளாக இருந்தவள். இன்று அவள் எவ்வாறு தன் காதலனுடன் செல்ல தைரியம் கொண்டாள் எனத் தாய் வருந்துகிறாள். கால நிலைக் கேற்றவாறு பெண்களுக்கு வீரமும் துணிவும் வந்து விடுகிறது.

பெண்ணானவள் எத்தகைய வீரச் செயலையும் செய்யத் துணிவள் என்பதைக் கீழ்வரும் நற்றிணைப் பாடல் உணர்த்தும்.

இல்லெழு வயலை ஈற்று தின்றெனப்  
பந்து நிலத்தெறிந்து பாவை நீக்கி  
அவ்வயிறு அலைத்த என்செய்வினைக்  
குறுமகள்  
மான் அமாப்பு அன்ன மையல  
நோக்கமொடு  
யானும் தாயும் மடுப்பத் தேனொடு  
தீம்பால் உண்ணாள் வீங்குவள் விமமி  
நெருநலும் அனையள் மன்னே!  
இன்றோ  
மையணல் காளைபொய்புகல் ஆக  
அருஞ்சுரம் இறந்தனள் என்பதன்  
மூருந்தேர் வெண்பல் முகிழ்நகை  
திறந்தே.

அறத்திற்கு மாறான, அக்கிரமமான செயல்களைச் செய்து வந்தவன் மகிடாசுரன். கலைமகள், திருமகள் துர்க்கை முதலானோர் மகிடாசுரனைக் கொன்றனர் என்பது புராண வரலாறு. புரட்டாசித் திங்களில் வரும் விழா நவராத்திரியாகும். மாளய அமாவாசைக்கு மறுநாள் முதல் நவமி வரை உள்ள ஒன்பது நாட்களில் நவராத்திரி விழா கொண்டாடப்படும். முதல் மூன்று நாட்கள் துர்க்கைக்கும், அடுத்த மூன்று நாட்கள் திரு

திரு. பொ. திருஞானம்-வெண்பாவூர்.

மகளுக்கும், இறுதி மூன்று நாட்கள் கலைமகளுக்கும் வழிபாடுகள் நிகழ்த்தப் பெறுகின்றன. மூவரும் மும்மூன்று நாட்கள் போர் செய்து இறுதி நாளான ஒன்பதாம் நாளன்று மகிடாசுரனைக் கொன்றனர். இறுதியாக வெற்றி விழாக் கொண்டாடப்படும் நாளே விஜயதசமி விழாவாகும். இதோடு நவராத்திரி விழா முற்றுப் பெறுகிறது.

நவராத்திரி விழாக் கொண்டாடப்படுங்காலங்களில் பெண்கள் இல்லங்களை அழகுபடத் தூய்மையாக வைத்திருப்பர். அழகான கொலுப் பொம்மைகளைச் சேகரித்து வீட்டில் வரிசை வரிசையாக அடுக்கி வைப்பர்; கண்ணைக் கவரும் வண்ணம் கற்பனைச் செறிவோடு அழகாக அடுக்கி வைக்கப்பட்டிருக்கும் காட்சி காணக் காண மகிழ்ச்சியாக இருக்கும். குழந்தைகள் கொலுவைக் காண்கிறபோது பொம்மைகளைத் தொட்டுப் பார்க்க ஆசைப்படும். ஒவ்வொரு நாள் மாலையிலும் வழிபாடு நடைபெறும் புதுவகையான பலகார வகைகள்

நைவேத்தியங்களாகப் படைக்கப் பெறும்.

பெண்கள், நவராத்திரி வழிபாட்டின்போது உற்றார், உறவினர், அயலார், குழந்தைகள் முதலியவர்களையெல்லாம் அழைத்து வழிபாடு செய்து, படைத்த நைவேத்தியங்களைப் பலருக்கும் பகிர்ந்து அளித்து மகிழ்வர். இவ்வாறு செய்வதன் மூலம் பகைமை உணர்வுமாறி பண்பட்ட உள்ளம் வளர வகை செய்கிறதெனலாம்.

நாள்தோறும் குழந்தைகட்கு அலங்காரம் செய்து வேடம் போட்டு குங்குமம் கொடுத்துப் பெண்களை அழைக்கும் காட்சி மிகவும் இனிமை தருவதாகும். சமையற்கலை, இசைக்கலை, நடனக்கலை, பொருட்கலை முதலிய கலையுணர்வுகள் வெளிப்பட அனைவரும் கண்டுகளிக்க உதவும் விழா நவராத்திரியாகும். மங்கையரின் கலைத்திறனை வளர்க்கும் விழா என்றால் அது மிகையாகாது.

நவராத்திரி விழாக் கொண்டாடுவதன் மூலம் வீடு விளக்கம் பெறுகிறது. ஆண்டுக்காண்டு இல்லற வாழ்வு செழிக்கக் காணலாம். குழந்தைகள் நல்ல முறையில் கல்வியறிவு பெறுவார்கள். சாதி, சமயப் பூசல் அகல வழியேற்படும். இனப்பாகுபாடில்லாமல் எல்லாரும் மாலை நேரத்தில் பகைமை உணர்வு நீங்க வழியேற்படுகிறது.

நவராத்திரி விழாவின்போது கலைமகள், லக்ஷ்மி, காளி ஆகியோரைப் பற்றிய பாடல்களைப் பாடி வழிபடுவதன் மூலம் இல்லம் மேன்மையுறுவதோடு ஊரும் உயர்ந்து விளங்குமென்பது உறுதியாகின்றது. இது உண்மை, வெறும் புகழ்ச்சியில்லை.

கிராமங்களில் கோவில்களில் நவராத்திரி விழாவின்போது இறைவனுக்குப் படைத்தளித்த நைவேத்தியங்களைப் பெரியவர்களுக்கும் சிறுவர்களுக்கும் கொடுப்பது உண்டு. பிள்ளைகளும் பெரியவர்களும் இது தான் நவராத்திரி என்று எண்ணி விடுகிறார்கள். அவர்களின் மனக்கருத்தை மாற்றி, கலைமகளின் தன்மை, திருமகளின் தன்மை, காளியின் இயல்பு போன்றவற்றை எடுத்துச் சொல்லி இவர்களால் சமுதாயத்துக்கு ஏற்படும் நன்மைகளை உணரச் செய்ய வேண்டும். தொழுது வணங்கிடச் செய்துவிட்டால் நவராத்திரியின் பயன் கிட்டும். உணர வைத்தல் நம் கடன்.



## சிறப்பான சக்தி சந்நிதிகள்

| | | |
|---|---|---|
| 1. | கற்பகாம்பாள் | .. மயிலாப்பூர் (சென்னை) |
| 2. | வடிவுடைநாயகி | ... திருவொற்றியூர் ,, |
| 3. | காமாட்சியம்மை | ... காஞ்சிபுரம் (செங்கற்பட்டு) |
| 4. | திரிபுரசுந்தரி | .... திருக்கழுகுன்றம் ,, |
| 5. | கொடியிடைநாயகி | ... திருமுல்லைவாயில் ,, |
| 6. | உண்ணுமலை அம்மை | .. திருவண்ணாமலை (வ. ஆ.) |
| 7. | முத்தாம்பிகை | ... திருஆமாத்தூர் (தெ. ஆ.) |
| 8. | பெரியநாயகி | ... திருப்பாதிரிப் புலியூர் ,, |
| 9. | கமலாம்பிகை | ... திருவாரூர் (தஞ்சை) |
| 10. | தர்மசம்வர்த்தினி | .. திருவையாறு ,, |
| 11. | மங்களாம்பிகை | ... கும்பகோணம் ,, |
| 12. | தையல்நாயகி | ... வைத்தீசுவரன்கோவில் ,, |
| 13. | யாழைப்பழித்த மொழியம்மை | .... வேதாரணியம் ,, |
| 14. | நீலாயதாக்ஷி | ... நாகப்பட்டினம் ,, |
| 15. | அபிராமியம்மை | .. திருக்கடவூர் ,, |
| 16. | அகிலாண்டேசுவரி | .. திருவானைக்கா (திருச்சி) |
| 17. | மட்டுவார்குழலி | ... திருச்சிராப்பள்ளி ,, |
| 18. | கருணாம்பிகை | .. அவிநாசி (கோவை) |
| 19. | மீனாட்சியம்மை | ... மதுரை (மதுரை) |
| 20. | காந்திமதியம்மை | ... திருநெல்வேலி (நெல்லை) |
| 21. | குழல்வாய் மொழியம்மை | ... திருக்குற்றாலம் ,, |
| 22. | பர்வதவர்த்தனி | .. இராமேஸ்வரம் (இராமநாதபுரம்) |
| 23. | போகமர்த்தபூண்முலையாள் | — திருநள்ளாறு (காரைக்கால்) |
| 24. | ஞானப்பூங்கோதை | ... திருக்காளத்தி (ஆந்திரம்) |

— திருமதி. கமலவேணி தனபதி

# ★ கீதை காட்டும் நல்வழி ★

**தெய்வாஸுர ஸம்பத் விபாக யோகம்**

**அத்தியாயம்—16.**

**பகுதி—10.**

தீயதையே செய்து பிறருக்குத் தீமையையே விளைவிக்கும் தீயவர்களுக்கு மரணத்திற்குப் பின் என்ன வாய்க்கிறது என்பதைப் பகவான் அடுத்த சுலோகத்தில் தெளிவுபடுத்துகிறார்.

ஆஸுரீம் யோனிமாபன்னா
மூடா ஜன்மனி ஜன்மனி |
மாமப்ராப்யைவ கௌந்தேய
ததோ யாந்த்யதமாம் கதிம் ||
(16-20)

"குந்தியின் மகனே! மூடர்கள் பல பிறவிகளில் அசுர யோனிகளில் தோன்றி என்னையடையாமல் இன்னும் கீழான கதியையே அடைகிறார்கள்."

வினைக்கேற்ற பிறவி உண்டாகிறது. நல்வினை நல்ல பிறவிக்கும், தீவினை மோசமான பிறவிக்கும் காரணமாயமைகிறது. கர்ம நியதி என்பது ஆற்றல் மிக்கது, மாற்ற முடியாதது. வினையும் வினைப்பயனும் தீயும் அதனிடத்து உள்ள வெப்பமும் போன்று பிரிகக முடியாதவை. பாபங்கள் பல செய்துவிட்டு அல்லது செய்து கொண்டே, கூடவே தான தர்மங்கள் பல செய்துவிட்டு ஊராரையும் உலகத்தையும் ஒருவன் ஏமாற்றலாம். ஆனாலும் அவனைப் படைத்த இறைவனை அவன் ஏமாற்றவே முடியாது. முன்பு செய்த பாபங்களுக்குப் பலன் வேறு இப்பொழுது செய்யும் புண்ணியத்துக்குப் பலன் வேறு; செய்த வினைக்கான பலனை அனுபவித்தேயாக வேண்டும்.

மலையுச்சியிலிருந்து உருட்டி விடப்பட்ட பாறை ஒன்று வெகு வேகமாகக் கீழ்நோக்கி உருண்டோடி வரும். எதுவரை? சமவெளியில் மிகக் கீழான நிலையை அடையும் வரை. அதுபோல தொடர்ச்சியான தீவினைகள் பல செய்து நல்லோர் பலரது சாபங்களைப் பெற்ற அசுர குணம் படைத்தவர்களைப் பகவான் தண்டனையாகக் கீழான பல யோனிகளில் தள்ளுகிறார். இத்தகையோர் மனித நிலையிலிருந்து கீழே விழுந்து புலியாகப் பிறப்பர். பின்னர் பாம்பு யோனியிலிருந்து புழு, பூச்சிகளாகப் பிறப்பெடுப்பர். அதன் பிறகு அதனினும் கீழான மரமாகப் பிறப்பெடுப்பர்.

'ஜன்மனி ஜன்மனி'-'பிறவிதோறும்' என்று இது பொருள்படுகிறது. அதாவது பாபயோனியில் மேன்மேலும் இத்தகைய அசுர குணத்தவர்கள் கீழ்நோக்கிச் செல்வர் என்பது கருத்து. இறைவனை அவர்கள் நிந்தித்ததால், இறையடியார்களை நிந்தித்துத் துன்புறுத்தியதால், பிற உயிர்களைத் துன்புறுத்தியதால் இறைவனுக்கும் அவர்களுக்கும் இடையேயான இடைவெளி கூடிக் கொண்டே போகும்.

தீய இயல்பு ஒருவனை மேலும் தீயவனுக்குகிறது. எனவே கீழ்மையில் அவன் மேலும் மேலும் செல்பவனாகிறான். கீழ்மை அதிகரிக்கின்ற அளவு அவன் செய்யும் பாபங்களும் அதிகரிக்கின்றன. எனவே அதற்கான தீவினைப் பயனும் அதிகரிக்கிறது.

இத்தகைய கீழ்மைக்குக் காரணம் யாது? பகவான் அடுத்த சுலோகத்தில் பதில் தருகிறார்.

த்ரிவிதம் நரகஸ்யேதம்
த்வாரம் நாசனமாத்மன: |
காம: க்ரோதஸ்ததா லோபஸ்
தஸ்மாதேதத்ரயம் த்யஜேத் ||
(16-21)

'காமம், க்ரோதம், லோபம் ஆகிய மூவித வாயிலை உடையது நரகம். இவை ஜீவனைக் கெடுக்கும் தன்மையன. ஆகையால் இம்மூன்றையும் ஒருவன் விட்டு விட வேண்டும்!

நரகத்தின் வாயில்கள் மூன்று: காமம், சினம், பேராசை என்பவையே அவை. அமைதியாக இருக்கும் மனத்தில் ஆசை புகுந்ததும் அங்கு புயற்காற்று வீசத்

திரு. டி. கே. நாராயணன்,
M.S.c., M.Phil.,
ஆசிரியர் "சமயஜோதி" மதுரை.

தொடங்குகிறது. எண்ணியது கிட்டாது என்ற நிலையில் ஆசை சினமாக மாறுகிறது. அப்போது புயற்காற்று பேய்க் காற்றாக மாறுகிறது. பேராசையும் சேர்ந்துவிட்ட நிலையில் மனதில் சூறாவளியே உருவாகிவிடுகிறது. இம்மூன்றும் மூன்று பகற் கொள்ளைக்காரர்களுக்கு நிகர். அவை ஒருவனது மனத்தில் நிலவுலகையில் அவனிடம் இருககும் பகுத்தறிவு பறிபோய் விடுகிறது. பகுத்தறிவை இழந்துவிட்ட நிலையில் அவன் பைத்தியம் போல ஆகி தகாதன பலவற்றைச் செய்யத் துணிகிறான்.

எவனிடம் ஆசையும், கோபமும் மிகுந்து காணப்படுகின்றனவோ, அவன் அசுர குணம் படைத்தவனாகிறான். நரகத்தின் வாயில்கள் இவை எனப்பட்டதால் மனிதனைப் பாபம் செய்யத் தூண்டுவன இவைதான்

என்பது தெளிவாகிறது. காமம் இல்லாத மனத்தில் க்ரோதம் இருக்காது. க்ரோதமும், காமமும் இல்லையெனில் அங்கே லோபமும் இருக்காது. இம்மூன்றும் இல்லையெனில் ஒருவன் அமைதியே வடிவெடுத்தவனாக இருப்பான். அவன் செய்யும் செயல்கள் யாவும் புனிதமானவையாக இருக்கும். எனவே ஒருவன் நரகத்தின் வாயில்களான இந்த மூன்று தீய குணங்களையும் தவிர்க்க வேண்டும் என்று பகவான் நம்மைக் கேட்டுக் கொள்கிறார்.

லோபம் என்பது போகப் பொருள்களைத் தனக்கென்றே கட்டிப் பிடிப்பதாகும். 'எல்லாம் எனக்கே வேண்டும்' என்ற எண்ணத்தால் பிறர் அடையும் இன்பத்தைப் பார்த்து லோபிக்குப் பொறாமை ஏற்படுகிறது. அதனால் அவன் பிறருக்கு இன்னல்கள் பல கொடுக்க முற்படுகிறான்.

அசுர இயல்பினின்று விடுதலை கிடைக்குமா? பதில் அடுத்த சுலோகத்தில் வருகிறது.

ஏதைர்விமுக்த: கௌந்தேய
தமோத்வாரைஸ்த்ரிபிர் நர: |
ஆசரத்யாத்மன: ச்ரேயஸ்
ததோ யாதி பராம் கதிம் || (16-22)

'அர்ஜுனா! இம்மூன்று நரக வாயில்களின்றும் விடுபட்டவன் தனக்கு நலன் செய்து கொண்டு பின்பு மோக்ஷத்தை அடைகிறான்.'

'காமம், வெகுளி, மயக்கம் இவற்றின் நாமக்கெடக் கெடும் நோய்' என்பது வள்ளுவர் வாக்கு. இது கிட்டத்தட்ட இந்தக் கீதா சுலோகத்தின் மொழி பெயர்ப்புப் போல இருக்கிறது. இங்கே மயக்கம், என்பதை லோபம் எனக் கொள்ளலாம். காமம், க்ரோதம், லோபம் இவற்றின் நாமம் கெட என்றால் இவை அறவே இல்லாதாகின்ற போது, நோய்களிலெல்லாம் ஆதிநோயான பிறவி நோய் இல்லாது நீங்கும் என்பது கருத்து.

பகவான் இவ்விடம் கூறும் மற்றொரு கருத்து குறிப்பிடத் தக்கது ஆகும். நரகத்தின் வாயில்களான இவற்றை வென்றவன் முதற்கண் தனக்கு நல்லதைச் செய்து கொண்டவன் ஆகின்றான். 'தன்னைத் தான் காக்கின் சினம் காக்க' என்ற வள்ளுவர் வாய்மொழிக் கொப்ப இது அமைகிறது. ஆசை, வெகுளி, லோபம் ஆகிய முத்தீய குணங்களை வென்றவன் அமைதி மற்றும் ஆனந்தத்தின் இருப்பிடம் ஆகிறான். அவனது உடலும் உள்ளமும் ஆரோக்கியமாயிருக்கின்றன. எந்த விதமான நோயும் அவனை அண்டாது. இறுதியில் முக்தியும் அடைகிறான்.

அசுரத் தன்மையை அகற்றி மேன்மையடைதற்கு வழி காட்டுவது எது என்ற கேள்விக்குப் பகவான் அடுத்த சுலோகத்தில் பதிலளிக்கிறார்.

ய: சாஸ்த்ரவிதி முத்ஸ்ருஜ்ய
வர்த்தே காமகாரத: |
ந ஸ ஸித்தி மவாப்னோதி
ந ஸுகம் ந பராம் கதிம் || (16-23)

'காமத்தின் வயப்பட்டு சாஸ்திரத்தின் ஆணையை மீறி நடப்பவன் எவனோ அவன் பரிபூரணனாகிறான் இல்லை. சுகமும் பெற மாட்டான், முக்தியுமடையான்'

வாழ்வில் தள்ள வேண்டியது எது? கொள்ள வேண்டியது எது? செய்ய வேண்டியது எது? செய்யக் கூடாதது என்பதையெல்லாம் நமக்கு உணர்த்துவது சாஸ்திரமேயாகும். 'ஸத்யம் வத, தர்மம் சர' -'உண்மை பேசு, அறநெறி நில்' போன்ற சாஸ்திர வாக்கியங்களை மதித்து அதன்படி நாம் நமது வாழ்க்கையை அமைத்துக் கொண்டால் வாழ்வின் இலட்சியமாகிய பரிபூரண நிலையையும் நித்திய சுகம் மற்றும் முக்தியையும் அடையலாம். ஆசைக்கு நாம் அடிமையாகும்போதுதான் சாஸ்திர விதிகளை மீறுகிறோம். சாஸ்திரம் நம்மை மேலோர்களாக்குவதற்காகவே உருவாக்கப்பட்டவை அவை. எனவே மறைநூல் வழி நடப்பவன் பெறற்கரிய பேற்றை வாழ்வில் அடைவான்.

இதே கருத்து இந்த அத்தியாயத்தின் கடைசிச் சுலோகத்திலும் வலியுறுத்தப்படுகிறது.

தஸ்மாச்சாஸ்த்ரம் ப்ரமாணம் தே
கார்யாகார்யவ்ய வஸ்திதௌ |
ஞாத்வா சாஸ்த்ர விதானோக்தம்
கர்ம கர்துமிஹார்ஹஸி || (16-24)

''ஆகையால் செய்யத் தகுந்ததையும் தகாததையும் நிச்சயிப்பதில் சாஸ்திரம் உனக்குப் பிரமாணமாகிறது. இங்கு சாஸ்திரம் கட்டளை இட்டிருப்பதை அறிந்து கர்மம் செய்யக் கடமைப்பட்டிருக்கிறாய்!''

நாம் செய்யும் செயல்களுக்கு அதாவது எதைச் செய்ய வேண்டும் என்பதற்கு சாஸ்திரமே பிரமாணமாகிறது. மகான்களின் வாழ்க்கை நமக்கு நல்ல பாடமாயமைகிறது. ஏனெனில் அவர்கள் அனைவரும் சாஸ்திரம் சொன்னபடி வாழ்ந்து காட்டியவர்கள். காமம், வெகுளி, மயக்கம் போன்ற துர்க்குணங்களை அறவே அவர்கள் வென்று விட்ட காரணத்தால் தெய்வ இயல்பு நிரம்பிய அவர்கள் செய்யும் செயல்கள் யாவும் சாஸ்திரம் கூறியபடியே அமைகின்றன. எனவே சாஸ்திரம் படிக்க இயலாத நாம் ஸ்ரீசுவாமி சிவானந்தர், பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் போன்ற மகான்களை நமது வழிகாட்டியாகக் கொண்டால் நேரிய வாழ்க்கை வாழ முடியும். அப்பொழுது நாம் வையகத்தில் வாழ்வாங்கு வாழ்ந்தவர்களாவோம்.

(தொடரும்)



# "பண்டரிபுரம் விட்டோபா"

ஜானுதேவர் என்பவருக்கும் சத்யாதேவி என்பவருக்கும் மிகுந்த தவத்தின் பயனாக ஒரு புதல்வன் பிறந்தான். அவனுக்குப் புண்டரீகன் எனப் பெயரிட்டு அருமையாகப் போற்றி வளர்த்து வரலாயினர். புண்டரீகனோ இளமை தொட்டே தாய் தந்தையருக்கு அடங்காமல் தான்தோன்றியாகத் தன் கருத்துப் படி மனம் போனபடித் திரிந்தான். திருமணம் ஆனால் திருந்துவான் எனப் பெற்றோர்கள் திருமணம் செய்து வைத்தனர். திருமணத் திற்குப் பிறகு புண்டரீகன் தன் மனைவி யையே பெரிதாக மதித்து அவள் சொல்லே வேதவாக்காக மதித்து அவள் சொற்படிக் கேட்டு நடந்து வந்தான். அதோடல்லாமல் அவளுக் காகத் தன் தாய் தந்தையரை அடித் தும் உதைத்தும் பல கடுஞ் சொற் களால் வைதும் துன்புறுத்தியும் வந் தான்.

ஒரு சமயம் புண்டரீகன் தன் மனைவியுடன் யாத்திரை செல்ல நேர்ந்தது. அப்போது குக்குட முனி வர் என்பவரின் தவச்சாலையில் ஒரு சமயம் தங்கும்படி நேர்ந்தது; அப்போது அதிகாலை நேரத்தில் சில இளம் பெண்கள் தவச்சாலையை நோக்கி வருவதை புண்டரீகன் கண்டு என்ன நடக்கப் போகிறது என ஒளிந்து இருந்து கவனிக்கலானான். வந்தவர்கள் அவரவர்கள் ஆளுக்கு ஒரு வேலையாக சாணம் தெளித்தல், பெருக்கிச் சுத்தம் செய்தல், தரையை மெழுகுதல், கோலமிடல் போன்ற வேலைகளைச் செய்துவிட்டு முனிவரைத் தொழுது எழுந்தார்கள். என்ன ஆச்சரியம்! அவர்கள் வரும் பொழுது அழுக்கு உடைகளும் அழ கில்லா கோர ரூபத்துடனும் வந்தார் கள். இப்போது தூய அழகிய ஆடை களும் பலவித ஆபரணங்களும் ஜொலிக்க கோர ரூபம்மாறி அழகிய தோற்றமும் பெற்றுப் புதிய பொலி வுடன் செல்வதைக் கண்டான். உடனே ஓடி, அவர்களை அணுகி வியந்து பாராட்டி 'நீங்கள் யார்? இங்கு ஏன் வந்தீர்கள்? தாங்கள் வரும்போது இருந்த அழுக்கு உடை களும் அலங்கோலங்களும் எப்படி மாறின? இவைகளை நான் அறியும் வண்ணம் விளக்கமாகக் கூறவேணும்' என்று கேட்டுக் கொண்டான்;

அந்தப் பெண்களும் புண்டரீகன் மீது இரக்கம் கொண்டு "நாங்கள் கங்கை, யமுனை, கோதாவரி என்னும் புண்ணிய நதிகளின் அதிதேவதைகள். எங்களிடம் பலரும் மூழ்கித் தங்கள் பாவத்தைப் போக்குகிறார்கள். நாங் கள் அந்தப் பாபச்சுமையை ஏற்ற

---

திரு. கே. நாகராஜன்-திருக்குணம்.

---

தனால் எங்களுக்கு அந்த அழுக்கு உடைகளும் கோரரூபமும் ஏற்பட் டது. நாங்கள் அப்பாவங்களை இம்

## சங்கஸ்பர்சமும் பாதுகாஸ்பர்சமும்

தன் தாயான சுநீதியின் சொல்படி ஐந்து வயது பாலகன் துருவன் யமுனா நதி தீரத்தில் தபஸ் செய்து வந்தான். பக வான் ஸ்ரீமந்நாராயணன் அவனுடைய பக்தியை மெச்சி அவ னுக்குக் காட்சியளித்தார்.

துருவன் ஸ்ரீமந்நாராயணனை ஸ்தோத்ரம் செய்ய முயன் றான். இதனையறிந்த ஸ்ரீமந் நாராயணன் தன் கையிலிருந்த பாஞ்சஜன்யமென்ற சங்கை துருவனுடைய இரண்டு கன்னங் களிலும் தடவினார். சங்கஸ்பர்சம் கிடைத்த மாத்திரத்தில் துருவன் பக்தி ஸ்லோகங்களால் ஸ்ரீமந்நாராயணனை ஸ்துதி செய்தான்.

ஸ்ரீநிகமாந்த மஹாதேசிகனை பாதுகை பற்றி ஸ்லோ கங்கள் இயற்றவேண்டும் என்றதும் ஸ்ரீதேசிகன் ஸ்ரீரங்கத்தில் பள்ளிகொண்டுள்ள ஸ்ரீரங்கநாதரை ஸேவிக்கச் சென்றார்; அங்கு கோவில் பட்டாச்சார் ஸ்ரீரங்கநாதனுடைய ஸ்ரீசடா ரியை தேசிகனுடைய சிரஸில் வைத்தருளினர்.

அந்த அரங்கனுடைய பாதுகா ஸ்பர்சம் ஏற்பட்டதால் ஸ்ரீதேசிகனும் அன்றய இரவிலேயே பாதுகையைப் பற்றி ஆயி ரம் ஸ்லோகங்கள் இயற்றினர்.

விபவாவதாரத்தில் சங்கஸ்பர்சம் காரணமாக ஸ்த்தோத் ரம். அர்ச்சாவதாரத்தில் பாதுகாஸ்பரிசம் காரணமாக பாதுகாஸஹஸ்ரம்.

சி. ஆர். திருவேங்கடத்தான்
டால்மியாபுரம்.

சிவர் பெருமானுக்குப் பணி செய்யும் வழிபட்டும் போக்குகின்றோம்''. என்று கூறி மறைந்தனர். புண்டரீகன் முனிவரை அடைந்து வணங்கி, தாம் கண்டவைகளையும் கேட்டவைகளையும் கூறி அப்பெண்கள் கூறியவற்றையும் கூறித் தங்களுக்கு இப்படிப்பட்ட மகிமையும் பெருமையும் வந்தது எவ்வாறு? என வினவினன். முனிவரும் அருள் கூர்ந்து அவனுக்கு அறிவுரை பகர்ந்தபோது "நான் என் தாய் தந்தையரைக் கடவுளாக மதித்து வழிபடுகிறேன். இதுவே எனது தவமும் பூசையும் ஆகும். வேறு பூசை தவம் எதுவும் செய்வதில்லை. இதனால்தான் எனக்கு இப் பெரும் பாக்கியம் ஏற்பட்டது: தாய் தந்தையரைக் காட்டிலும் சிறந்த தெய்வம் வேறு இல்லை. "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்'' என்பதை நீயறியாயா? வேதமும் "மாத்ரு தேவோ பவா பித்ருதேவோ பவா'' என்றுதானே கூறுகிறது என்று கூறினார். புண்டரீகன் இதுவரை தான் செய்து வந்த தவறு குறித்து வருந்தினன். அன்று முதல் தன் தாய் தந்தையரை தெய்வம் என நினைத்து உண்டி உடை முதலியன தந்தும் அவர்களுக்குச் செய்ய வேண்டிய பணி விடைகள் அனைத்தையும் செய்தும் அதன் பின்பே தன் அலுவல்களில் ஈடுபட்டு வந்தான்.

புண்டரீகன் தன் தாய் தந்தையர் பால் காட்டி வந்த அன்பும், செய்து வந்த பணிவிடைகளும், உபசாரங்களும் அளவிட்டுக் கூற இயலாது நாளுக்கு நாள் பெருகிக் கொண்டே வந்தது. ஸ்ரீமன் நாராயணன் அவன் அன்பை நேரில் காணும் பொருட்டு வந்த சமயம், புண்டரீகன் தன் தாய் தந்தையருக்குப் பணிவிடை செய்து கொண்டிருந்தானாகையால் வந்தவரை வரவேற்று அவருக்கு ஆசனமாக ஒரு செங்கல்லை இட்டு அதன் மேலிருக்கச் சொல்லிவிட்டு மீண்டும் தாய் தந்தையர்களின் பணிவிடைகளை செய்து முடித்து விட்டு பின்னரே நாராயணரை வந்து தொழுது நின்றான்.

ஸ்ரீமன் நாராயணர் வணங்கிய புண்டரீகனை நோக்கி 'அன்பனே நீ உன்னுடைய தாய் தந்தையரை வழிபடும் முறையையும் அவர்கள்பால் செலுத்திவரும் அன்பையும் கண்டு மகிழ்ந்தோம். உனக்கு வேண்டும் வரம் யாது?' என்று கேட்க, புண்டரீகன் வணங்கி 'சுவாமி யான் பெற்ற பேறு பெறுக இவ்வையகம் என்னும் பெரு நோக்குடன் தேவரீர் இவ்விடமே இருந்து அடியேனுக்கு அருள் செய்தது போல அன்பர் அனைவருக்கும் அருள்புரிய வேண்டும்'. என்று கேட்டுக் கொண்டான். நாராயணரும் அவ்வண்ணமே செங்கல்லின் மேல் நின்று அன்று முதல் அன்பர் பலருக்கும் அருள் செய்யலானார். செங்கல்லின் மேல் நின்றமையால் விட்டோபா-விட்டல - என்னும் பெயர்கள் ஏற்பட்டன. மராட்டிய மொழியில் விட்=செங்கல், உபா =நிற்றல் என்பது பொருள். தாய் தந்தையரே முதல் தெய்வம் என்னும் பழமையான பொருளை உணர வைத்து காட்சிதந்து ஆட்கொண்டபடியால் அந்த இடத்திற்கு பண்டு= பழமையை அறிபுரம்=அறிய வைத்த ஸ்தலம் எனவும், பண்டு= ஆதி, அரிபுரம்=நாராயணர் வாழும் இடம் அதாவது ஆதிநாராயணர் வாழும் இடம் எனவும் பொருள்பட இரண்டு நதிகளுக்கு இடையிலான அரங்கத்தில் பண்டரிபுர வாசனாக- பாண்டுரங்கனாக - இன்றும் அன்பர்களுக்கு அருள்பாலித்து வருகின்றார்.



# ஹயக்கிரீவர்

ஒரு நாள் மாலை நேரம். ஓய்வாகத் திண்ணையில் உட்கார்ந்திருந்தேன்; அடுத்த வீட்டுக் குழந்தைகள் என் பக்கத்தில் வந்து உட்கார்ந்தார்கள். 'அக்கா! அக்கா! ஒரு கதை சொல்லு' என்று என்னைக் கேட்டார்கள். மகாவிஷ்ணுவின் அம்சங்களில் ஒன்றான ஹயக்கிரீவர் என்னும் திருவுருவின் கதையை அவர்களுக்குச் சொல்ல ஆரம்பித்தேன்.

ஒரு சமயம் இந்திரன், பிரம்மதேவன் முதலிய தேவர்கள் மிகப் பெரிய யாகம் ஒன்றைச் செய்ய விரும்பினார்கள். முதலில் காக்கும் கடவுளான மகாவிஷ்ணுவின் அருளைப் பெறச்சென்றார்கள். வைகுண்டத்தில் மகாவிஷ்ணு இல்லை.

அப்போது மகாவிஷ்ணு தமது வில்லின் கயிற்றை முகவாய்க் கட்டையில் ஊன்றிக் கொண்டு ஓரிடத்தில் நித்திரை செய்த வண்ணம் இருந்தார். பத்தாயிரம் ஆண்டுகள் அரக்கரோடு போர் செய்த களைப்பினால் அவர் அவ்வாறு இருந்தார். தேவர்கள் ஞானதிருஷ்டியால் மகாவிஷ்ணு இருக்கும் விஷயத்தை அறிந்து அங்குச் சென்றார்கள். பல நாள் காத்திருந்தும் காக்கும் கடவுளுக்கு உறக்கம் தெளியவில்லை. அதனால் கவலைப்பட்ட இந்திரன் கறையான் உருக்கொண்டு வில்லின் கயிற்றை அறுந்து விழச் செய்தான். அறுந்த கயிறு பட்டதனால் மகாவிஷ்ணுவின் தலை அறுந்து, விழுந்த இடம் தெரியாமல் போய்விட்டது. இதனால் தேவர்கள் பெரும் துயரம் அடைந்தார்கள்.

பிரம்மதேவன் தேவர்களை ஆறுதல் படுத்தி, இலட்சுமி தேவியைத் துதிக்கும்படி கூறினார்; அவர்களும் அவ்வாறே திருமகளை வழிபட்டனர். அப்போது தேவி அசரீரியாய்ப் பின் வருமாறு கூறினாள்.

'அழகுமிக்க எனது திருமுகத்தை மகாவிஷ்ணு ஒரு சமயம் இகழ்ச்சியாகப் பேசினார். அதனை என்னால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. நான் மிகவும் கோபம் அடைந்து 'என்னைப் பழித்த உங்கள் தலை அறுந்து விழக்கடவது' என்று அவரைச் சபித்து விட்டேன். அதனால் அவருடைய தலை இப்போது அறுபட்டது. அறுந்த இந்தத் தலை லவண சமுத்திரத்தில் விழுந்து முழுகி விட்டது.'

'நான் இவ்வாறு மகாவிஷ்ணுவைச் சபிப்பதற்கு வேறு ஒரு காரணம் உண்டு. முன்னொரு காலத்தில் ஹயக்கிரீவன் என்னும் அரக்கன் இருந்தான்; அவனுக்குக் குதிரைத் தலை இருந்தது. அவன் ஆயிரம் ஆண்டுகள் என்னை நோக்கித் தவம் செய்தான்; தவத்தை மெச்சி அவனுக்கு எதிரில் தோன்றி 'உனக்கு என்ன வரம் வேண்டும்?' என்று கேட்டேன். தனக்கு எவ்வகையிலும் மரணம் உண்டாகாதபடி வரவேண்டும் என்று அவன் கேட்டான். அப்போது நான், "உன்னைப் போன்ற வரால் மட்டுமே உனக்கு மரணம் உண்டாகும். வேறு யாராலும் உனக்கு மரணம் உண்டாகாது' என்று அவனுக்கு வரம் கொடுத்தேன்; அப்போதுமுதல் அவன் தேவர்களையும் முனிவர்களையும் துன்பம் செய்து வருகிறான். அவன் அழியும் சமயம் இப்போது உண்டாகியிருக்கிறது. அதனால் மகாவிஷ்ணுவிற்கு இந்நிலை ஏற்பட்டது" என்று திருமகள் கூறினாள்.

அதனைக் கேட்ட பிரம்மதேவன் ஒரு குதிரையின் தலையை அறுத்து மகாவிஷ்ணுவின் கழுத்தில் பொருத்தினார். அப்போது மகாவிஷ்ணு குதிரைத் தலையுடன் ஹயக்கிரீவராக எழுந்தார். தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் தொல்லை விளைவித்து வந்த அரக்கனை மகாவிஷ்ணுவின் அம்சமான ஹயக்கிரீவர் கொன்று அழித்தார். அன்று முதல் மக்கள், மகாவிஷ்ணுவின் அம்சமாகிய ஹயக்கிரீவரைப் பக்தியுடன் வழிபட்டு வருகிறார்கள். இவ்வாறு தேவி பாகவதத்தில் கூறப்பட்டுள்ளது.

தமிழ்நாட்டில் கடலூருக்கு அருகில் திருவகீந்திரபுரம் (திருவந்திபுரம்) என்னும் ஊர் இருக்கிறது; இங்கு 'ஔஷதகிரி' என்னும் சிறு குன்று இருக்கிறது. இக்குன்றின் மீது ஹயக்கிரீவருக்குத் திருக்கோவில் உள்ளது. திருவகீந்திர புரத்து இறைவனை மங்களாசாசனம் செய்து திருமங்கையாழ்வார் பத்து பாசுரங்களைப் பாடியுள்ளார். ஹயக்கிரீவரை வழிபட்டு வந்தால் குதிரையைப் போன்ற வலிமையும் முயற்சியும் உண்டாகித் தடைகளை உடைத்து எச்செயலையும் வெற்றிகரமாக முடிக்க முடியும் என்று மக்கள் நம்புகிறார்கள். இதனால் பக்தர்கள் இங்கு வந்து ஹயக்கிரீவரை வணங்கிச் செல்லுகிறார்கள்.

இவ்வாறு நான் சொன்ன செய்திகளைக் கேட்ட குழந்தைகள் மகிழ்ச்சி அடைந்தார்கள். 'நாங்களும் ஒரு நாள் திருவகீந்திரபுரம் சென்று ஹயக்கிரீவரைத் தரிசித்து அவருடைய அருளைப் பெறுவோம்' என்று சொல்லி அவரவர் வீட்டுக்குப் போனார்கள்.

திருமதி. ராதாசண்முகம்,
சேலம்



# சிறக்கும் பதம் தருவார்



நாஞ்சில் கிருஷ்ணப்ரியன்,
மதுரை.

இன்பம் வேண்டும் என்றுதான் எல்லாரும் விரும்புகின்றார்கள்.

ஒரு புழுவை வெய்யிலில் போட்டாலும் அது தன் உடலுக்குச் சுகம் வேண்டும் என்று நிழலை நோக்கித் தன் உடலை நகர்த்துகின்றது.

எனினும் உயர்ந்த இன்பத்தை சரியாகத் தெரிந்து வைத்திருக்கவில்லை.

இங்கே உயிர்கள் எனக் குறிப்பிடப்படுவது மனித உடலைத் தங்கள் இருப்பிடமாகக் கொண்டுள்ள உயிர்களைத்தான்.

கண்ணால் காணப்படும் ரூப இன்பம் உயர்ந்தது என்பர் சிலர்.

காதால் கேட்கப்படும் சப்த இன்பமே உயர்வு என இன்னும் சிலர் பேசுவர்.

இவைகளைக் காட்டிலும் மெய்யினால் உணரப்படும் ஸ்பரிச இன்பத்திற்கு உவமையே இல்லை என்பர் சிலர்.

இவ்வாறு ஐம்பொறிகளில் இருந்து கிடைக்கப் பெறும் ஐம்புலன் இன்பங்களைத்தான் மனித இனம் உயர்வாகக் கருதிக் கொண்டிருக்கிறது.

இவைகளை உயர்ந்த ஆன்மீக வாதிகள் மதிப்பதில்லை.

இச்சிற்றின்பங்களைப் பெற்று மகிழ்வதற்காக மனிதன் தோன்றவில்லை என்பது அவர்கள் வாதம்.

எந்த வகையான இன்பமாக இருந்தாலும் அது நீண்ட காலம், ஏன் நீண்ட நேரம் நிலைத்திருக்கும் என்று உறுதியாகக் கூறமுடியாது.

எனவே மகான்கள், ஞானிகள் ஆகியோர் என்றும், எப்பொழுதும் நிலையாக இருக்கும் பேரின்பமே வேண்டும் என்பர்.

அப்பேரின்பம் அடைவதுதான் வாழ்வின் நோக்கம.

அதற்குச் சிறக்கும் பதம் என்று பெயர் உண்டு.

அச்சிறக்கும் பதம் தருபவர் யார்?

இக்கேள்விக்கு விடை தருகிறார் வித்தாரக் கவி ஒருவர்.

அழகிய மணவாள தாசர் என்ற பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் என்பது அக்கவியின் பெயர்.

அவர் பாடிய அஷ்டப் பிரபந்தங்களில் ஒன்று திருவேங்கடத் தந்தாதி.

நூறு இனிய பாசுரங்களால் புனையப்பட்ட அப்பிரபந்தத்தில் ஒரு பாசுரத்தில் அவர் கூறும் கருத்துக்கள் சிந்திக்கத் தக்கவை.

சிறந்த பதம் தருகின்ற திருவேங்கடச் செல்வரின் சிவந்த திருப்பதங்களைத் தொழுது உய்ய எண்ணாமல் நாம் ஐம்புலன்களின் இன்பமே பெரிதென்று எண்ணி வாழ்கிறோமே...... இப்படி வாழுகின்ற நம்மைப் பாதகர்களே என விளித்து, எச்சரிக்கின்றார்.

அந்த எச்சரிக்கையை விட்ட அவர், தம் கருத்தை வலியுறுத்த அருமையான உவமானங்களைக் குறிப்பிடுகின்றார்.

வேடர்கள் யானையைப் பிடிக்க எண்ணுகின்றனர். அந்த யானை உலவுகின்ற இடத்திற்கு அருகில்

(32-ம் பக்கம் பார்க்க)



ஸ்ரீ ரங்கப்பட்டனம் (மைசூர்) பெருமாள் பள்ளிகொண்ட நிலை
திரு. வி. முத்துராமன் — கோவை.



# ஸ்ரீ வேங்கடேஸ்வரசுவாமி திருக்கோயில், திருமலை

## நவராத்ரி பிரம்மோற்சவம்

**14-10-85 முதல் 22-10-85 வரை**

17-10-85 கருடசேவை 21-10-85 வெள்ளித்தேர்

# திருமலையின் இயற்கைக் காட்சிகள்

பேராசிரியர் டாக்டர். ந. சுப்புரெட்டியார்,
சென்னை.

புண்ணியத்தின் புகலிதெனப் புகழும் வெற்பு
பொன்னுலகிற் போகமெலாம் புணர்க்கும் வெற்பு
விண்ணவரும் மண்ணவரும் விரும்பும் வெற்பு
வேங்கடவெற் பெனவிளங்கும் வேத வெற்பே.
(தே. பி. 82)

என்று திருமலையின் புகழ்பாடுவர் வேதாந்த தேசிகர். அசித்தும் எம்பெருமான் படைப்பாதலால் அதுவும் வழிபாட்டிற்குரியது.



திருமலை அடிவாரம்

சென்று சேர்திரு வேங்கட மாமலை
ஒன்று மேதொழ நம்வினை ஓயுமே.
(திருவாய் 3.3;8)

என்ற நம்மாழ்வாரின் பாசுரம் இக்கருத்திற்கு அரண் செய்வதாக அமைகின்றது. அழகு கொழிக்கும் இடங்களில்தான் ஆண்டவன் கோயில் கொண்டு எழுந்தருள்வான் என்பதற்குத் திருமலை ஒரு பெரிய சான்றும். கார்காலம் நிறைவு பெற்று முன்பனிக்காலத்தில் திருமலையைச் சேவித்தால் இந்த அழகை-இயற்கை எழிலைக்-கண்டு களிக்கலாம். நாம் ஊனக் கண்ணால் காணும் காட்சிகளையே கவிஞர்கள் இரசவாதம் செய்து நம் மனக்கண்ணுக்கு அற்புதக் காட்டுவர். அலாவுத்தீன் என்ற சிறுவனை மந்திரவாதி ஒருவர் மந்திர விளக்கைக் கொண்டு பல அற்புதமான காட்சிகளைக் காணச் செய்ததாகக் கதைகளில் படித்துள்ளோம். 'திவ்விய கவி' என்று போற்றப் பெறும் பிள்ளைப் பெருமாள் அய்யங்கார் நம்மைத் திருமலைக்கு இட்டுச் செல்லுகின்றார்.

என்கண்ணை மறந்துன்இரு கண்ணையே
என்னகத்தில் இசைத்துக் கொண்டு
நின்கண்ணால் புவியெல்லாம் நீயெனவே
நான்கண்டு நிறைவு கொண்டு
(பா. க: கோவிந்தன் பாட்டு)

என்று பாரதியாருக்குக் கோவிந்தன் பிரபஞ்சத்தைக் காட்டி 'தானே இப்பிரபஞ்சம்' என்று உணர்த்துவது போலவே, பிள்ளைப் பெருமாள் அய்யங்கார் தம்முடைய 'கவித்துவம்' என்ற மந்திர ஆற்றலால் நாம் ஊனக் கண்ணால் காணும் காட்சிகளையே நம் மனக்கண்ணுக்கு வேறு விதமாகத் தோன்றச் செய்து நம்மை மகிழ்விக்கின்றார். இனி, அவர் காட்டும் காட்சிகளை ஒவ்வொன்றாகக் காண்போம். வேங்கடமலை விண்ணோருக்கும் மண்ணோருக்கும் எளிதில் அடையக் கூடியவாறு அமைந்துள்ளது என்று அதன் உயர்ச்சியைக் கூறும்போது இக்காட்சிகள் தாமாக எழுகின்றன.

துய்யசெம்பொற் கோயிற் சுடரெறிப்பக் கண்மூகிழ்த்து
வெய்யவன்தேர் மாஇடறும் வேங்கடமே (9)
(துய்ய-சுத்தமான; சுடர்-ஒளி; எறிப்ப-வீசுதலால்)

என்பதுடன் காட்சி தொடங்குகின்றது. திருக்கோயிலின் விமானம் பொன் மயமானது. அதன் சுடர் எம்மருங்கும் வீசி நிற்பதால் வெய்யோனின் தேரில் கட்டிய குதிரைகளின் கண்கள் கூச்சமடைந்து கண் விழிக்க மாட்டாமல் கால் இடறுகின்றன என்கின்றார். இதுவே மலையின் உயர்ச்சியை எடுத்துக் காட்டுகின்றது.

**இராசிகளின் காட்சிகள்:**

பன்னிரண்டு இராசிகளில் மேடம், கடகம், சிங்கம், கன்னி, துலாம், தனுசு, மகரம், கும்பம், மீனம் ஆகிய ஒன்பது இராசிகளை மலையின் உயர்

வோடு பொருத்திக் காட்டும் கவிஞரின் மந்திர ஆற்றலைக் கண்டு வியக்கின்றோம்:

வாடப் பசித்த வரியுழுவை வாலாட்டி
மேடத்தைப் பார்த்துறுக்கும்
வேங்கடமே (16)

(வரி உழுவை-வரிப்புலி; வாலாட்டுதல்-சினக்குறிப்பு; மேடம்-ஆடு; உறுக்கும்-கோபிக்கும்)

திருமலைச் சாரலில் பசியுடன் புலியொன்று திரிந்து கொண்டுள்ளது. அது வானத்திலுள்ள ஆட்டுக்கிடா வடிவுள்ள மேடராசியைப் பார்த்துச் சீறுகின்றது. 'மேடத்தைப் பார்த்திருக்கும் வேங்கடமே' என்ற பாடத்திற்குப் புலியானது தன் உணவிற்கும் வலிமைக்கும் தகுந்ததாகிய எருது வடிவுள்ள இடபராசியை எதிர் நோக்கிக் கொண்டு அவ்வகை வலிமை இல்லாத மேடராசியைக் கண்டு வெறுத்திருக்கின்றது என்றும் பொருள் கொள்ளலாம்.

மலையில் குரங்குகள் குதித்து விளையாடிக் கொண்டுள்ளன. அவை குளிர்ச்சியான மலை முகட்டில் நண்டு வடிவமான கடக ராசி பொருந்தி வரக் கண்டு அஞ்சியோடுகின்றன. இக்காட்சியைத் திவ்விய கவி,

தாவிவரும் வானரங்கள்
தண்குவட்டில் கற்கடகம்
மேவிவரக் கண்டோடும்
வேங்கடமே (17)

(குவடு-சிகரம்; மேவி-பொருந்தி) என்று நமக்குக் காட்டுவர். அடுத்து யானைகளின் ஊடல் காட்சி வருகின்றது. மருத நில உரிப் பொருள் ஈண்டுக் குறிஞ்சி நிலத்துக்கு உரியதாகின்றது? பிடி களிற்றினிடத்து ஏதோ ஒரு குற்றத்தைக் கற்பித்துக் கொண்டு அது காரணமாக அதனிடம் வெறுப்புக் காட்டி ஊடி நிற்கின்றது. இது வானத்தில் தற்செயலாகச் சிங்க வடிவமான சிங்கராசியைக் கண்ணுறுகின்றது. கண்டதும் அஞ்சி அந்த அச்சமிகுதியினால் ஊடலை மறந்து தானே ஓடி ஆண் யானையைப்



இரவில் காலி கோபுரம்

பற்றுக் கோடாகக் கொண்டு அதனைத் தழுவுகின்றது.

ஒண்சிந்து ரத்தைவெறுத்
தூடும் பிடிவேழம்
விண்சிங்கம் கண்டணைக்கும்
வேங்கடமே (18)

(சிந்துரம்-ஆண்யானை; ஊடும்-பிணங்கும்; பிடிவேழம்-பெண் யானை)

அடுத்து, 'கழைக் கூத்து' ஒன்றைக் காட்டுகின்றார் திவ்விய கவி. மலையின் மீது ஓங்கி வளர்ந்துள்ள மூங்கிலுக்கு நேராக பெண் வடிவமான கன்யாராசி வருகின்றது. இக்காட்சி கழைக் கூத்திபோல் தோற்றம் அளிக்கின்றது.

மாதுமடக் கன்னிகழை
வந்தணுகிக் கம்பத்தின்
மீதுநடிப் பாளொக்கும்
வேங்கடமே (19)

(மாது-அழகு; கன்னி-இளம் பெண்; கழை-மூங்கில்; கம்பம்-நாட்டியக் கழைக்கோல்)

இஃது ஓர் அற்புதமான காட்சி.

மூங்கிலின் வளத்தைக் கொண்டு இன்னொரு அற்புதமான காட்சியை நம் மனக்கண்முன் கொண்டு வந்து நிறுத்துகின்றார் திவ்விய கவி. ஒரு மூங்கில் வானுற வளர்ந்து நிற்கின்றது; அதற்கு நேராக சுறுமீன் வடிவமான மகர ராசி வந்து தங்கும்போது அது மன்மதனது கொடி மரம்போல் காட்சியளிக்கின்றது.

தேன்ஏறித் தேன்வைக்கும்
திண்கழைமேல் விண்மகரம்
மீன்ஏறி வேள்கொடியாம்
வேங்கடமே (22)

(தேன்-வண்டுகள்; தேன்-தேன் கூடு; திண்கழை-வலிய மூங்கில்; மகரம்-மகர ராசி)

என்று காட்டுவர்: மன்மதன் சுறுமீன் வடிவத்தைக் கொண்ட கொடியை உடையவன்; அதனால் அவனுக்கு வடமொழியில் 'மகரத் வஜன்' என்றும் தென்மொழியால் 'சுறவக் கொடியோன்' என்றும் பெயர்கள் உண்டு.

மலைக் குறவர்கள் இரத்தின வணிகம் நடத்துவது அற்புதம். வானத்தில் நிறை கோல் வடிவமான துலா ராசி காணப்படுகின்றது. அதைக் கொண்டு தாம் சேகரித்து வைத்திருக்கும் பிரகாசிக்கின்ற இரத்தினக் கற்களை வைத்து எடை காண்கின்றனர்.

மன்னு குடிக்குறவர்
வானூர் துலாத்திடையே
மின்னு மணிநிறுக்கும்
வேங்கடமே (20)

(மன்னு-நிலை பெற்ற; வான் ஊர்-வானத்தில் செல்லுகின்ற; மணி-இரத்தினம்)

என்பது திவ்யகவி காட்டும் சொல்லோவியம். இந்தக் குறவர்களைப் பற்றிய இன்னொரு காட்சி. தினைப் புனத்தைக் காக்கின்ற குறவர்கள் தண் மதியில் களங்கத் தோற்றமாக இலங்கும் மான் வடிவத்தைக் காண்கின்றனர். அதனைத் தினைப் புனத்தை மேயவரும் மான் எனக் கருதுகின்றனர். உடனே வானத்தில் வில் வடிவாகக் காணப்பெறும் தனுர் ராசியைக் கை வில்லாகக் கொண்டு அம்பு எய்ய முயலுகின்றனர்.

கொல்லைக் குறவர்
குளிர்மதிமா னைக்ககன
வில்லைக் குனித்தெய்யும்
வேங்கடமே (21)

(ககனம்-வானம்; வில்-தனுர் இராசி)

என்பது திவ்விய கவியின் சொல்லோவியம். அம்புலியில் வாழும் மான் வேங்கடமலையில் அதிரும் குரலையும் திறந்த வாயையும் கொண்ட வெம் புலியைக் கண்டு அஞ்சி நடுங்குகின்றது. இதனை,

அம்புலியின் வாழ்மான்
அதிரும் குரற்பகுவாய்,
வெம்புலியைக் கண்டேங்கும்
வேங்கடமே (32)

(அம்புலி-சந்திரன்; பகுவாய்-திறந்தவாய்)

என்ற திவ்விய கவியின் சொல்லோவியத்தில் கண்டு மகிழலாம்.

திருவேங்கடமலையில் ஓங்கி வளர்ந்துள்ள மரக்கொம்பொன்றில் தேன் கூடு கட்டப் பெற்றுள்ளது. வானத்தில் செல்லுகின்ற பிறைச் சந்திரனது வளைந்த வடிவமான கொம்பு அத் தேனிறாலில் பட்டு அது உடைகின்றது. அதிலிருந்து பாயும் தேன் வானத்திலுள்ள அதற்கு நேராக வந்து பொருந்தும் குடவடிவமான கும்பராசியில் நிறைகின்றது.

ஒண்கொம்பிற் தேன்இறால்
ஊர்பிறைக்கோட் டாலுடைந்து
விண்கும்பம் வாய்நிறைக்கும்
வேங்கடமே (23)

(கொம்பு-கிளை; இறால்-தேன்கூடு)
கோடு-வளைந்த வடிவம்;

திருவேங்கட மலையிலுள்ள மரக் கொம்பு கும்ப ராசிக்கு மேலுள்ளதென்றும், அதன்மீது பிறைமதி படப்பெறுவது என்றும் கூறியதனால் மலையின் உயர்வையும் மலைவளத்தையும் காட்டிய படியாகும் இது. திருமலையில் திருக்கோயிலுக்கு அருகிலுள்ள கோனேரியில் கூனலிள வெண் குருகு ஒன்று 'ஓடு மீன் ஓட உறுமீன் வருமளவும்' காத்திருக்கின்றது. விண்ணில் செல்லும் மீன் வடிவமான மீன ராசியின் நிழல் நீரில் தெரியக் கண்டு அதனை உண்மையான மீன் என்று கருதிக் கொத்துகின்றது; ஏமாந்து போகின்றது. இங்ஙனம் இராசி மண்டலக் காட்டியவர் நம்மை விண்மீன் மண்டலத்திற்கு இட்டுச் செல்லுகின்றார்.

**விண்மீன் மண்டலக் காட்சிகள்:**

திருமலையில் ஆண் குரங்கு (கடுவன்) பெண் குரங்கு (மந்தி)மாக இரண்டு குரங்குகள். 'மண் மூலம் தா' என்று மந்தி கடுவனைக் கேட்கின்றது; அதாவது மண்ணிலிருக்கும் கிழங்கை உண்ணுவதற்குப் பெயர்த்தெடுத்துத் தருமாறு கேட்கின்றது. உடனே வானத்திலுள்ள மூலம் என்ற நட்சத்திரம் (விண் மூலம்) அதனைச் செவி மடுத்து தன்னைப் பிடித்துக் கொடுக்கச் சொன்னதாகக் கருதி அஞ்சி நடுங்குகின்றது.

மண்மூலம் தாஎன்று
மந்திகடு வற்குரைப்ப
விண்மூலம் கேட்டேங்கும்
வேங்கடமே (25)

(மண்மூலம்-கிழங்கு; விண்மூலம்-மூல நட்சத்திரம்)

என்பது திவ்விய கவியின் சொல்லோவியம். இந்த வருணனையில் அம்மலை நட்சத்திர வீதிக்கு அருகில் உள்ள படியையும, அம்மலைக் குரங்கு தேவகணமும் அஞ்சத் தக்க வலிமையுடைய தென்பதும் தெளிவாகும். திருவேங்கடமலையில் தொங்கவிடப் பெற்ற பொன்னூலாகிய ஊஞ்சலிலிருந்து கொண்டு மகளிர் உந்தி



திருமலையில் வசந்தோற்சவம்



திருமலை பிரம்மோற்சவத்தின் போது, வண்ண விளக்குகளால் அலங்கரிக்கப்பட்ட திருமலை நுழைவு வாயில்.

உந்தித் தள்ளி விளையாடுகின்றனர்; அந்த ஊஞ்சல் அவிட்ட நட்சத்திரத்தில் படுங்கால் அங்கு அம்மகளிர் இறங்குகின்றனர்.

நாலவிட்ட பொன்னூசல்
 நன்னுதலார் உந்துதொறும்
மேலவிட்ட தொட்டிழியும்
 வேங்கடமே (26)
 (நாலவிட்ட-தொங்கவிடப்பட்டுள்ள; நுதல்-நெற்றி; இழியும்-இறங்கும்)

என்பது கவிஞர் காட்டும் காட்சி.

**வேறு சில வருணனைகள்:**

வேங்கடமலையின் உயர்ச்சியைக் காட்டும் போக்கில் வேறு சிலவற்றையும் வருணித்துக் காட்டுவர் திவ்விய கவி. வேங்கட மலையில் மண்டிக் கிடக்கும் உயர்ந்த சாதி மூங்கில்கள் முற்றி வெடித்தலால், அவற்றினின்றும் சிதறும் முத்துக்கள் மேகத்தைத் தொளை செய்து அம்மேகத்தினின்றும் வெளிப்படுகின்ற மழை நீர்க்கட்டிகளுடன் கீழே விழுகின்றன (33) அம்மலையின்மீது வானுற ஓங்கி வளர்ந்துள்ள மூங்கில் அவண் காணப் பெறும் இந்திர வில்லில் தொடுத்தற்கு அமைந்த அம்புபோல் காணப் பெறுகின்றது.

செல்லுக்கு மேற்செல்லும்
 திண்ணியவேய் வாசவனார்
வில்லுக்கு வாளியாம்
 வேங்கடமே (34)
செல்-மேகம்; வேய்-மூங்கில்; வாசவனார் வில்-இந்திர தனுசு; வாளி-அம்பு)

என்பர் அய்யங்கார். அந்த மூங்கிலின் உச்சியில் கட்டப் பெற்ற தேன் இறால் உம்பருலகத்து நிலைக் கண்ணடிபோல் திகழ்கின்றது 35). உம்பருலகின் ஐவகைக் கற்பகத் தருக்களில் கட்டப் பெற்ற செவ்விய தேன் இறால் மலையின்மீது வரையாடு தாவிப் பாய்வதால் கிழிந்து தேனைச் சொட்டுகின்றது (40). இதனால் திருமலையின் உயர்ச்சியும் ஆட்டின் கொழுமையும் தெளியப்படுகின்றன. பாக்கு மரங்களைப் பற்றிய வருணனை பாங்குற அமைந்து படிப்போரின் கவனத்தை ஈர்ப்பதை எடுத்துக் காட்டுவார் திவ்விய கவி.

பொன்கமழும் கற்பகத்தின்
 பூங்கா வனத்துக்கு
மென்கமுகம் காலாகும்
 வேங்கடமே (35)
(பூகாவனம்-கற்பகச் சோலையாகிய பந்தல்; கமுகம்-பாக்கு)

என்பது கவிஞரின் சொல்லோவியம்; விண்ணை முத்தமிடும்படி வளர்ந்துள்ள பாக்கு மரங்கள் உம்பருலகத்துக் கற்பகச் சோலையாகிய பந்தலுக்கு நாட்டப் பெற்ற அழகிய கால்கள் போல் காட்சியளிக்கின்றன. அப்பாக்கு மரத்தில் வெடித்த நிலையிலுள்ள வெண்ணிறப் பாளைகள் வெங்கதிரோனுக்கு அசைக்கப் பெறும் வெண்கவரிபோல் காட்சி அளிக்கின்றன:

தண்கமுகின் பாளை
 தடங்கதிரின் செல்வனுக்கு
வெண்கவரி போலசையும்
 வேங்கடமே (37)
 (கதிரின் செல்வன்-சூரியன்)

என்பர் திவ்வியகவி; முழு மதியம் வானத்தில் இறுமாந்து உலவுகின்றது. அப்பொழுது அருகில் செல்



வெள்ளித் தேர்

லும் மத யானையொன்று அத்திங்களை இனிய பாலில் கலந்த உணவுத் திரளை-திம்பாற்கவளம்-என்று கருதித் துதிக்கையை நீட்டிய வண்ணம் உள்ளது (31).

**வேறு சில காட்சிகள்:**

திவ்விய கவி வேறு பல இடங்கட்கு இட்டுச் சென்று பல்வேறு காட்சிகளைக் காட்டுவார். திருமலையிலுள்ள தென்னை மரத்தில் வெண்மையான பாளை மலர்ந்து கிடக்கின்றது. சுனை நீரிலுள்ள மீன் கூட்டங்கள் அதனைக் கொக்கு என்று கருதி நீரினுள் அஞ்சி மறைகின்றன (27). தென்னை மரத்தினின்று இளநீர்க் காய்கள் கீழே வீழ்தலால் அம்மலையிலுள்ள இரத்தினங்கள் சிதறுகின்றன. செந்நிறமுள்ள அவற்றை நெருப்பென்று கருதி யானைகள் விலகிச் செல்லுகின்றன (29) வேங்கடகிரியில் மேகங்கள் இடி முழக்கம் செய்கின்றன. அம்முழக்கத்தை மத யானையின் பிளிறல்கள் என்று கருதி அவ்யானைகளை விழுங்குவதற்கு மலைப் பாம்புகள் வாயைத் திறந்த வண்ணம் காத்திருக்கின்றன.

அங்கயலின் மேகம்
அதிரப் பெரும்பாந்தள்
வெங்கயமென்று அங்காக்கும்
வேங்கடமே (30)
(அயல்-அருகில்; பாந்தள்-மலைப் பாம்புகள்; வெங்கயம்-வெவ்விய மத யானைகள்; அங்காத்தல்-வாய் திறத்தல்)

என்ற அடிகளில் இக்காட்சியினைக் காட்டுவார் கவிஞர்.

தேவர்களும் குறிஞ்சி நிலத்துக் குறத்தியரும் அமிர்தத்தையும், குறிஞ்சித் தேனையும் பண்டமாற்றுச் செய்து கொள்ளுகின்றனர்.

வன்குறிஞ்சி மாதர்பால்
வானோர் மருந்துக்கு
மென் குறிஞ்சித் தேன்மாறும்
வேங்கடமே (41).

(வன்குறிஞ்சிமாதர்—குறத்தியர் வானோர் மருந்து—தேவாமிருதம்)

என்பதில் இக்காட்சியினைக் காணலாம். இதனால் உம்பருலகத்துக் கருகில் திருமலை உள்ளதென்பதும், தேவர்களின் நடமாட்டம் இம்மலையில் நிகழ்கின்றது என்பதும் உம்பர் உலக அமிர்தத்தினும் வேங்கடமலைத் தேன் இனிது என்பதும் அறியக் கிடக்கின்றன. இன்னோர் இனிய அழகிய காட்சி. திருமலையில் பெண் குரங்கொன்று மாமரத்தில் பழுத்துத் தொங்கும் தேமாங்கனியொன்றினைக் கையில் கொண்டு தாவிச் செல்கின்றது. இதனை உம்பருலகில் கற்பகத்தருவில் அமர்ந்திருக்கும் ஆண் குரங்கு அக்கனியைத் தனக்குத் தருமாறு கையை நீட்டுகின்றது.

வாவுகவின் மந்திநுகர்
மாங்கனிக்குக் கற்பகத்தின்
மேவுகவி கைநீட்டும்
வேங்கடமே (42)

(வாவு—தாவிச்செல்லும்; கவின்—அழகிய; மேவு—பொருந்திய; கவி—ஆண்குரங்கு)

என்ற அடிகளில் இக்காட்சியைக் காட்டுவார் கவிஞர். இதனால் கற்பகக் காவில் கிடைக்கும் கனிகளிலும் திருமலையில் காணப்படும் கனி சுவையில் இனியது என்ற கருத்துத் தோன்றுகின்றது.

திருமலையில் மலர்களைக் கொண்டு காட்டப்பெறும் காட்சி மனத்தினை மாண்புறுத்துகின்றது. கொன்றை மரங்கள் சொரியும் பொன் மலர்கள் காந்தள் மலர்களின் மீது விழுகின்றன. இக்காட்சி ஈகைக் குணமுடைய வேந்தன் இரவலர் கையில் பொன்னைச் சொரிவது போல் உள்ளது என்று கூறுவார் கவிஞர் (45) செந்நிறமான பதுமராகக் கல்லைச் சுற்றிக் கொண்டு இருக்கும் மலைப் பாம்பு பகலவனைச் சுற்றிக் காணப் பெறும் ஊர்கோள் வட்டம் போல் காட்சியளிப்பதைக் காட்டுவார்(47) குறவர்கள் யானையின் மீது மாணிக்கக் கற்களை வீசி எறிகின்றனர். அவை முகிலினிடையில் காணப் பெறும் மின்வெட்டுப்போல் திகழ்கின்றன (46). மாணிக்கப் பாறையின் மீது தாவிப் பாயும் குரங்குகள் செங்கதிரோன் மண்டலத்தின் மீது பாயும் மாருதி போல் தோன்றுகின்றன (48). திருமலையின் மீதுள்ள வெண்ணிறமான பளிங்குப்பாறையில் உறங்கும் மான் திங்கள் மண்டிலத்தின் நடுவில் காணப்பெறும் மானை ஒத்துள்ளது.

கொம்பின் இருல் வாங்கநிமிர்
குஞ்சரத்தை அம்புலிமேல்
வெம்பியெழும் கோள் அரவாய
வேங்கடமே (49)

(கொம்பு—கிளை; இருல்—தேனடை; குஞ்சரம்—யானை; வெம்பி—சினந்து; கோளரவு—இராகு)

என்ற வரிகளில் காட்டப் பெறும் காட்சி நம் சிந்தையைக் கவர்வதாக உள்ளது. மரக்கொம்பில் தொங்கும் தேனிறாலைக் கவர்வதற்குக் கை நீட்டுகின்றது கானில் திரியும் வேழம். அக்காட்சி திங்களைப் பற்றுவதற்கு அதன் மீது கறுக் கொண்டு எழும் இராகு என்னும் கரும்பாம்பு போல் தோன்றுகின்றது. இங்ஙனம் காட்சிகளைத் தலைக்கட்டுகின்றார் திவ்வியகவி.

இயற்கைப் பொருள்கள் இன்ப மயமான சமாதியில் அடங்கிக் கிடக்கின்றன. அவற்றின் சமாதியைக் கலைக்காமலிருப்பதே அறம். அந்தச் சமாதியில் நாம் கலந்து கொள்ள முயலவேண்டும். கலந்து கொள்ளும் இயல்புடையவனே கவிஞன்; அவன் இயற்கையோடு பழகுவதில் திறன் வாய்ந்தவன். கவிஞன் இயற்கையை அதன் இன்ப சமாதி கலையாமல் தழுவுகின்றான். அவன் அனுபவித்த இன்பப் பெருக்கில் ஒன்றிரண்டு திவலைகள் அவன் பாடிய பாடல்களில் சொட்டும். அதைப் பார்த்தே நாம் 'கலைகள், கலைகள்' என்று கொண்டாடுகின்றோம். திவ்வியகவியின் இன்பப் பெருக்கின் ஒன்றிரண்டு திவலைகளே அப்பெருமகன் காட்டும் திருமலைக் காட்சிகள்.

★

# திருமலையும் ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாய நெறியும்

## திருவத்யயனோத்ஸவம்

திருமலையில் திருவத்யயனோத்ஸவம் இருபத்து மூன்று நாட்கள் நடைபெறுகிறது. வைகுண்ட ஏகாதசிக்கு முன்பு வரும் அமாவாசையன்றிரவு தோமாலஸேவையாகி அமுது செய்தவுடன் திருமலையப்பன் உபயநாச்சியார்களுடன் புறப்பட்டுத் திருமாமணிமண்டபம் சேர்ந்து கிழக்கு முகமாக திவ்யஸிம்ஹாஸனத்தில் வீற்றிருப்பர். நம்மாழ்வார் திருமேனி திருமலையில் இல்லாத குறை ஒருவாறுதீர அவருக்கு ஆசார்யரான ஸ்ரீஸேநாபதியாழ்வான் ஸிம்ஹாஸனத்தின் கீழே பக்கத்தில் தெற்குமுகமாக வீற்றிருப்பர். மண்டபத்தின் கீழே எம்பெருமானாரும் தெற்கு முகமாகவே எழுந்தருளியிருப்பர். தளிகை கண்டருளியவுடன் ஜீயர் ஸ்வாமிகளும் அத்யாபகர்களும் இயற்பாவில் முதல் திருவந்தாதி முதலாகத் திருவிருத்தமீறாக உள்ள ப்ரபந்தங்களில் முதற்பாட்டும் சாத்துப்பாட்டுக்களும் ஸேவித்துத் தொடங்குவார்கள். மறு நாள் அதாவது பகற்பத்தில் முதல் நாள் காலை இயற்பா முழுவதும் ஸேவிப்பர்கள். அன்றிரவு திருப்பல்லாண்டும் வண்ண மாடங்கள் பதிகமும் தொடங்குவார்கள். இரண்டாம்நாள் காலை பெரியாழ்வார் திருமொழியில் முதலிரண்டு பத்துக்கள். இரவு சென்னியோங்குத் தொடக்கம். மூன்றாம் நாள் காலை பெரியாழ்வார் திருமொழி முடிவு பெறும். இரவு விண்ணீல மேலாப்புத் தொடக்கம். நான்காம் நாள் காலை திருப்பாவையும் நாச்சியார் திருமொழியும். இரவு ஊனேறு செல்வத் தொடக்கம். ஐந்தாம் நாள் காலை பெருமாள் திருமொழி முதல் கண்ணிநுண் சிறுத்தாம்பு முடிய ஸேவை; இரவு பெரிய திருமொழியில் வாடினேன் வாடி, தாயே தந்தை தொடக்கம், ஆறும் நாள் காலை திருமொழியில் முதலிரண்டு பத்துக்கள். இரவு வாடமருதிடை தொடக்கம். ஏழாம் நாள் காலை மூன்று நான்கு பத்துக்கள். இரவு பண்டை நான்மறையும் தொடக்கம். எட்டாம் நாள் காலை ஐந்து ஆறு ஏழு பத்துக்கள். இரவு தெள்ளியீர் தொடக்கம். ஒன்பதாம் நாள் காலை எட்டு ஒன்பது பத்துக்கள். இரவு காதிற்கடிப்பு தொடக்கம். பத்தாம் நாள் காலை பத்து பதினொன்று பத்துக்கள். இரவு திருக்குறுந்தாண்டகமும் திருநெடுந்தாண்டகமும் ஸேவித்து, பெரியாழ்வார் திருமொழி திருநெடுந்தாண்டகம் இவற்றைச் சாத்துவார்கள். அதன் மறுநாள் அதாவது இராப்பத்து முதல் நாள் தொடங்கி இரவில் திருப்பல்லாண்டு ஆரம்பித்துத் திருவாய்மொழியில் முறையே ஒவ்வொருபத்தாக ஸேவித்துப் பத்தாம் நாளிரவு திருவாய்மொழி சாத்துமுறை செய்யப்படும். அதன் மறுநாள் இரவு கண்ணிநுண் சிறுத்தாம்பு தனியாக ஸேவிக்கப்படும். அதற்கு மறுநாளிரவு இராமாநுச நூற்றந்தாதி உபதேசரத்தினமாலை ஸேவையாகிச் சாற்றுமுறையில் இயற்சாத்து வாழித் திருநாமம் ஸேவிக்க அத்யயனோத்ஸவம் முடிவு பெறும். ஆகத் திருமலையப்பனுக்குத் திருவத்யயனோத்ஸவம் இருபத்துமூன்று நாட்கள். அதன் மறுநாள் வராகப்பெருமாளுக்குக் கோயில் திருவாய்மொழியுடன் அத்யயனோத்ஸவம் நடைபெறும்.

இராப்பத்து சாத்துமுறையன்றும் இராமாநுச நூற்றந்தாதி சாத்துமுறையன்றும் சாத்துமுறை முடிவு பெற்றவுடன் எம்பெருமானார் புறப்பட்டு ப்ரதக்ஷிணமாக மூலவர் ஸந்நிதிக்கெழுந்தருளிக் கருடமண்டபத்தில் த்வாரபாலகர்களிடம் எழுந்தருளியிருப்பர். அர்ச்சகர் மூலவரிடமிருந்து பரிவட்டம், மாலை, சேஷவஸ்த்ரம் இவற்றைக் கொணர்ந்து எம்பெருமானாருக்கு அணிவித்து ஸ்ரீசடகோபன் ஸாதிப்பர். பிறகு ஜீயர் ஸ்வாமி முதலியோர் உடையவர் அநுஸந்திப்பதாக, குன்றமேந்தி அகலகில்லேன் ஒழிவில்காலம் பல்லாண்டு அடியோமோடும் என்ற பாட்டுக்களையும் கத்யத்தில் ஓம் பகவந் நாராயண என்று தொடங்கும் முதல் சூர்ணையையும் ஸேவிப்பர்கள். முன்னும் பின்னும் தனியனும் வாழியும் முறையே உண்டு. கோஷ்டிக்கும் ஸ்ரீசடகோபன் ஸாதிப்பதுண்டு.

**பாரத்துவாசன்**

பகற்பத்து சாத்துமுறையன்று குன்றமேந்தி முதலிய பாசுரங்களின் ஸ்தானத்தில் தாயே தந்தையென்னும் என்ற பாசுரமொன்றே ஸேவிக்கப்படும். மற்றவை முன்புபோலவே நடக்கும். இப்படி எம்பெருமானார் மங்களாஶாஸனம் செய்தருளுவதனால்தான் திருமலையில் மூலபேரத்திற்கு ப்ராதான்யம் வந்ததென்று திருமலையொழுகு தெரிவிக்கிறது. இவ்விதமாக இம்மூன்று நாட்களிலும் மங்களாசாஸனம் முடிந்தபின்பு எம்பெருமானார் மறுபடியும் விமான ப்ரதக்ஷிணமாகப் புறப்பட்டு தாடீபஞ்சகம் யதிராஜ விம்சதி கோஷ்டியுடன் தம் ஸந்நிதி சேர்ந்து தீர்த்தம் அனந்தாழ்வான் (பாதுகை) ப்ரஸாதம் இவற்றைக் கோஷ்டியாருக்கு ப்ரஸாதிப்பர்.

தெலுங்கு வருஷப் பிறப்பாகிய யுகாதிப் பண்டிகை தொடங்கி நாற்பது நாட்கள் திருமலையப்பனுக்கு நித்யோத்ஸவம் மாலைவேளையில் நடைபெறும். சிறிய திருமடல் வீதி

யில் அநுஸந்திப்பார்கள். திருவீதிப் புறப்பாடு முடிந்தவுடன் எம்பெருமானுர் ஸந்நிதி வாசலில் பெருமாள் எழுந்தருளியவுடன் சுக்கு வெல்லம் கடலைப் பருப்புச் சுண்டல் பகாளா பாத் அமுது செய்து கோஷ்டி விநியோகமாகும்.

எம்பெருமானுருக்குத் திருமலையில் நடைபெறுகிற பத்துநாளுத்ஸவத்தில் நாலாயிரஸேவை நடைபெறும். மாலைப் புறப்பாட்டுக்களில் பத்து நாட்களிலும் திருமலையப்பனுடனும் காலைப் புறப்பாட்டுக்களில் அப்பனுடைய ஸ்ரீசடகோபனுடனும் எம்பெருமானுர் திருவீதி எழுந்தருளுவர்.

காலையில் திருவீதியிலும் பகலில் ஆஸ்தானத்திலும் இயற்பா முதலிய மூவாயிர ஸேவையும் இரவு ஆஸ்தானத்தில் திருவாய்மொழி ஸேவையும் நடக்கும். காலைப் புறப்பாடானுக் கோபுர வாசலுக்குள் இயல் முடிந்தவுடன் உள்ளே எழுந்தருளும்போது விமான ப்ரதக்ஷிணத்தில் பத்து நாளிலும் தாடீபஞ்சக யதிராஜவிம்சதி அனுஸந்தானமும், ஸந்நிதி சேர்ந்ததும் இயற்சாத்தும் இயற்படி விநியோகமும் நடைபெறும். மாலையில் திருவீதியில் சிறிய திருமடல், சாத்துமுறையன்று உடையவர் ஸந்நிதி வாசலில் பெருமாள் எழுந்தருளித் திருவாய்மொழி சாத்துமுறை நடைபெறும்.

இயல் கோஷ்டியுடன் நடக்கும் திருமலைப் புறப்பாடுகளெல்லாவற்றிலும் கோபுர வாசலுக்குள் இயல் முடிக்கும்போது கோஷ்டிக்கு ஸ்ரீ சடகோபன் ஸாதிப்பதுண்டு.

கீழ்த்திருப்பதியில் கோவிந்தராஜனுக்குக் காலைத்தோமால ஸேவையில் திருப்பள்ளியெழுச்சியும், திருப்பாவையும், மாலைத் தோமால ஸேவையில் நித்யாநுஸந்தானமும், அனத்யயன காலங்களில் உபதேசரத்தினமாலாதிகளும் உண்டு. கோவிந்தராஜன் சக்ரவர்த்தி திருமகன் திருச்சானூர்த் தாயார் இவர்களின் ப்ரஹ்மோத்ஸவங்களில் இயல் ஸேவிக்கும் க்ரமம் உடையவர் ஸந்நிதியில் இயற்சாத்து இயற்படி விநியோகம் இவையெல்லாம் திருமலையிற்போல் நடைபெறும். திருச்சானூர்த் தாயாருத்ஸவம் அனத்யயனத்தில் வந்தால் உபதேசரத்தினமாலை திருவாய்மொழி நூற்றந்தாதிகளே ஸேவிக்கப்படும்.

கோவிந்தராஜன் மாதத்திருநக்ஷத்திரம் உத்தரத்தில் திருவந்தாதிகளே வரிசையாக ஸேவிக்கப்படும். ஒவ்வொரு மாதப் பௌர்ணமியிலும் இரவு பூலங்கியில் பெருமாள் திருமொழி. வருஷத் திருநக்ஷத்திரம் பங்குனி யுத்தரத்தில் காலையில் எண்ணெய்க்காப்பில் நாச்சியார் திருமொழியும் இரவு பூலங்கியில் பெருமாள் திருமொழியும் ஸேவிக்கப்படும்.

திருமலையில் அத்யயனோத்ஸவம் தொடங்கும் அமாவாஸைக்கு அடுத்த அமாவாஸையில் தொடங்கும் ஸ்ரீ கோவிந்தராஜனுடைய அத்யயனோத்ஸவம் திருமலையிற்போலே நடைபெறும். ஆழ்வார்களும் ஆசார்யர்களில் எம்பெருமானரோடு கூரத்தாழ்வானும் எழுந்தருளி நடைபெறுவது விசேஷம். பகற்பத்து சாத்துமுறை இராப்பத்து சாத்துமுறை கண்ணிநுண் சிறுத்தாம்பு இராமாநுச நூற்றந்தாதி நாட்களில் முறையே கலியன் நம்மாழ்வார் மதுரகவிகள் இராமாநுசன் ஆகியோர்க்குக் கோவிந்தராஜன் மூலவரிடம் மங்களாசாஸனமும் தாடீபஞ்சக, பராங்குசாஷ்டக, யதிராஜவிம்சதி ஸ்தோத்ராநுஸந்தானமும் திருமலையிற்போலவே நடைபெறும். இராப்பத்து சாத்துமுறையன்று மாலை நம்மாழ்வார் கோவிந்தராஜனுடன் திருவீதியெழுந்தருளும்போது, ஆழ்வார் மட்டும் பெருமாளைப் பிரிந்து சிறிது தூரம் வடக்கே சென்று திருமலையைப் பார்த்தெழுந்தருளியிருந்து குன்றமேந்தி முதலிய பாசுரங்களை ஸேவிக்க மங்களாசாஸனம் செய்தருளித் திரும்பிக் கோவிந்தராஜனுடன் சேர்ந்து ஸந்நிதிக்கெழுந்தருளுவர்; திருமலை மங்களாசாஸனம் முடிந்து கோவிந்தராஜனுடன் சேரும் வரையில் ஆளவந்தார் ஸ்தோத்ராநுஸந்தானம்; இரவு திருமாமணி மண்டபத்தில் ஆழ்வார் திருவடி தொழுகிறார்.

கீழ்த் திருப்பதியில் உள்நம்மாழ்வார் வெளிநம்மாழ்வாரென்று நம்மாழ்வார் இருவர் ஸேவை ஸாதிக்கின்றனர். வெளிநம்மாழ்வார் அத்யயனோத்ஸவத்தில் கோவிந்தராஜனைத் திருவடி தொழுகிறார். பத்து நாளுத்ஸவம் ஸ்வப்ரபந்த ஸேவையுடன் கண்டருளுகிறார். உள்நம்மாழ்வார் கோவிந்தராஜனுடன் (சாத்துமுறையன்று) திருமஞ்சனமும் கோயில் திருவாய்மொழி சாத்துமுறையும் கண்டருளுகிறார். பெரியாழ்வாரும் இருவர் உளர்; அவர்களில் வெளிப்பெரியாழ்வார் கோவிந்தராஜனுடன் (சாத்துமுறையன்று) திருப்பாவை திருவாய்மொழி சாத்துமுறை கண்டருளுகிறார்.

ஸேனை முதலியார் பொய்கையார் பூதத்தார் பேயார் திருமழிசைப்பிரான் குலசேகரர் உட்பெரியாழ்வார் தொண்டரடிப் பொடிகள் திருப்பாணாழ்வார் முதலியாண்டான் பட்டர் ப்ரதிவாதிபயங்கரம் அண்ணா இவர்களுக்குப் பத்துநாளுத்ஸவமில்லை. ஒருநாள் மட்டும் (சாத்துமுறைமட்டும்) மாதத் திருநக்ஷத்திரம் போல் நடக்கிறது. சேனை முதலியார் மூலவர்பக்கத்தில் இருக்கிறபடியால் அவர்க்குப் பெருமாளிடமிருந்து பரிவட்டம் மாலை ஸ்ரீசடகோபன் எல்லாம் உண்டு. மற்றவர்க்கு இல்லை.

ஸுதர்சனாழ்வான் சாத்துமுறையன்று கோவிந்தன் திருவீதி எழுந்

(44-ம் பக்கம் பார்க்க)

# வேத நல் விளக்கு

इन्द्रं मित्रं वरुणमग्निमाहु रथो दिव्य :
स सुपर्णो गरुत्मान् ।
एकं सद् विप्रा बहुधा वदन्ति अग्निं यमं
मातरिश्वानमाहु : ॥

"அவர்கள் மேலான தேவனை இந்திரனென்றும், மித்ரனென்றும், வருணன் என்றும், அக்னி என்றும், ஸுபர்ணன் கருத்மான் என்றும் அழைக்கின்றனர். ஒன்று தான் உளது. அதற்கே ஞான நல்லோர்கள் பல பெயரிட்டு அழைக்கின்றனர். அதனை அக்னி என்றும், யமன் என்றும், மாதரிஸ்வான் என்றும் அழைக்கின்றனர்." (R. V. 1-164-46).

நமது இந்து மதத்தின் ஆணி வேராகக் கருதப்படுபவை வேதங்கள். கர்ப்பா தானம் துவங்கி மரணம் வரையிலான ஜீவனின் வாழ்வு முழுவதும் வேதங்களாலேயே நிர்வகிக்கப் படுகின்றன். நமது நாட்டையும், மக்களையும் வேதம் இன்றும் தன் பிடிப்பிலேயே வைத்திருக்கின்றது என்றால் மிகையாகாது. வேத நல் விளக்கே இன்றும் நம்மை அறியாமையாகிய இருட்டினின்று அழியா ஆன்ம ஒளி நோக்கி அழைத்துக் செல்கிறது.

வேத மொழியான சம்ஸ்கிருதம் தெய்வீகமானது. தேவ சிருஷ்டி தேவ நாகரீ. இதற்கு இணையான வளமான மொழி ஏதுமில்லை எனலாம். இந்த அமர மொழி என்றும் சுடர் விடும் அமர தீபமாக வேத நல் விளக்கை ஏற்றித் தந்திருக்கிறது. சப்தம், அதாவது ஒலி அநாதி, அழிவற்றது; சப்தத்தின் முழுமையான வெளிப்பாடான சம்ஸ்கிருத மொழியும் அநாதி, நித்யமானது, ஒருவரால் தோற்றுவிக்கப்படாதது. அது போன்றே வேதமும் அநாதியாயும், அபௌருஷேயமாயும், அழிவற்றதாயும் உள்ளது. இதனை எல்லா துறையியல் அறிஞர்களும் ஏற்றுக் கொண்டுள்ளனர்.

வேதங்களைப் பற்றி ஆராய்ச்சி செய்து சில அரிய நூல்களை சமீப காலத்தில் வெளியிட்டுள்ள 'ஜான் டி வீ' என்ற பிரஞ்சு நாட்டு அறிஞர் சில அரிய கருத்துகளை வெளியிட்டுள்ளார்: கால சக்கரத்தில் இயற்கையின் சீற்றத்தால் பல பிரமிடுகள் அழிந்து விட்டன. அரிய கலைக் கூடங்களும், சிற்பங்களும் நில அதிர்வுகளால் அழிந்துவிட்டன; பரம்பரையாகக் காக்கப்பட்டு வந்த பொற்குவியல்களும் செல்வங்களும் கொள்ளையடிக்கப் பட்டுவிட்டன.

ஆனால் பாரத நாட்டில் வேதமானது ஓதலின் மூலமும், ஓதுவித்தலின் மூலமும் தலைமுறை தலைமுறையாக இன்று வரை பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளாகக் காக்கப்பட்டு வந்துள்ளன. என்ன ஆச்சரியம் ஐயா இது? அறிவின் அழியா அலைகள் மாறி மாறி எழுந்து கொண்டேயிருக்கின்றன. இந்த வேதக் கடல் மாறாமல் அழியாமல் இருக்கிறது. காலத்தை வென்று நிற்கிறது.

இதன் ரகசியம் என்ன என்று அறியத் தோன்றுகின்றதல்லவா. இதன் ரகசியம் வேதமே. வேத மறை, வேத ரகசியம் வேதம் தான். வேதம் சில நினைவுச் சின்னங்களையோ, கோயில்களையோ, கொள்கைகளையோ, ஸ்தாபகரையோ அல்லது தனக்கென ஒரு வரலாற்றையோ கொண்டிராததால் கால வெள்ளத்தில் அழியாமல் நிற்கிறது.

இந்துக்கள் என்று அழைக்கப் படும் இந்தியர்களுக்கு ' வேதமே மேலான, இறுதியான சாசனமாகும்; இதனால்தான் நமது சாஸ்திரங்கள் வேதப் பிரமாணத்தை ஏற்பவனை ஆஸ்திகன் என்றும், ஏற்காதவனை நாஸ்திகன் என்றும் கூறுகின்றன.

வேதம் ரிக்வேதம், யஜுர்வேதம், ஸாம வேதம், அதர்வ வேதம் என நான்கு வேதங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன; ஒவ்வொரு வேதமும் ஸம்ஹிதைகள், பிராம்மணங்கள், ஆரண்யகங்கள் என மூன்று பிரிவுகளைக் கொண்டவை. சிலர் ஆரண்யகங்களை பிராம்மணங்களின் உட்பிரிவு என்பர். உபநிடதங்கள் யாவும் ஆரண்யகப் பிரிவுகளில் அடங்கும். ஈசாவாஸ்ய உபநிடதம் மட்டும் வாஜஸநேயி ஸம்ஹிதையைச் சேர்ந்தது; ஸம்ஹிதைகளும் பிராம்மணங்களும் அடங்கிய பகுதி கர்ம காண்டம் எனப்படும். ஆரண்யகங்கள் உபாசனா காண்டம் எனப்படும். ஆரண்யகங்களின் இறுதிப் பகுதியாகிய உபநிடதங்கள் ஞான காண்டம் எனப்படும்.

ஸம்ஹிதைகள் மொத்தம் ஐந்து. அவையாவன் ரிக்வேத ஸம்ஹிதை, தைத்திரீய ஸம்ஹிதை, வாஜஸநேயி ஸம்ஹிதை, ஸாமவேத ஸம்ஹிதை, அதர்வவேத ஸம்ஹிதை, இவற்றுள் தைத்திரீய ஸம்ஹிதை கிருஷ்ண யஜுர் வேதம் என்றும், வாஜஸநேயி ஸம்ஹிதை சுக்ல யஜுர்வேதம் என்றும் அழைக்கப்படும்; இவ்விரண்டையும் இணைத்துப் பொதுவாக யஜுர் வேதம் என்று கூறுவர்.

ஸம்ஹிதைகள் என்று சொல்லப் படும் வேத மந்திரங்கள் ஸ்வரத்துடன் வாய்விட்டுச் சொல்லப்படுவதனாலேயே பெரும்பயன் அளிக்க வல்லவை. இவை பாக்களாயும், உரைநடை வடிவிலும் பல விருத்தங்களைக் கொண்டவையாக இருக்கின்றன.

ஸ்ரீ இராமானுஜ சுவாமிகள்,
கும்பகோணம்.

ரிக்வேத ஸம்ஹிதை 1028 ஸுக்தங்களையும், அவற்றுள் 10,589 மந்திரங்களையும் கொண்டுள்ளது. யஜுர் வேத ஸம்ஹிதை 40 அத்தியாயங்களையும், 1875 பாக்களையும் கொண்டுள்ளது. ஸாம வேத ஸம்ஹிதை 1875 மந்திரங்களைக் கொண்டுள்ளது. இவற்றுள் 1800 மந்திரங்கள் ரிக் வேதத்தைச் சேர்ந்தவை; அதர்வ ஸம்ஹிதை 20 தலைப்புகளின்கீழ் 5977 மந்திரங்களைக் கொண்டுள்ளது. 731 ஸுக்தங்களையும் கொண்டுள்ளது.

பிராம்மணங்களின் பெரும்பகுதி உரைநடையாகவே இருக்கின்றன. இவை யஞ்ஞங்களைப் பற்றிய விளக்கங்களைக் கூறும். இவை இதிகாசம், புராணம், வித்யை, உபநிடதம், சுலோகம், சூத்திரம், வியாக்கியானம், அநுவியாக்கியானம் என எண் வகை அங்கங்களைக் கொண்டவை.

ரிக்வேதம் கௌஷீதகி, ஐதரேயம், பைங்கிரகஸ்யம், ஸாத்யாயனம் என்ற நான்கு பிராம்மணங்களைக் கொண்டுள்ளது. ஸாம வேதம் ஸாம விதானம், மந்திரம், ஆர்ஷேயம், வம்சம், தைவதாத்யாயம், தலவகாரம், தாண்ட்யம், ஸம்ஹிதோபநிடதம் என எட்டு பிராம்மணங்களைக் கொண்டது. கிருஷ்ண யஜுர் வேதம் தைத்தரீயம், வல்லபி, ஸத்யாயனி, மைத்ராயணி என்ற நான்கு பிராம்மணங்களைக் கொண்டது. சுக்ல யஜுர் வேதம் சதபத பிராம்மணம் என்ற ஒன்றை மட்டும் கொண்டுள்ளது;

ஆரண்யகங்களைத் தனி நூலாகவே கருதலாம். பல ஆரண்யகங்கள் இப்போது கிடைக்கவில்லை. இப்பகுதியைச் சார்ந்த நூற்றுக்கும் அதிகமாக உபநிடதங்கள் இன்று வழக்கில் உள்ளன.

யோகப் பயிற்சிகளின் பொருட்டு ஆதியில் நான்காகப் பிரிக்கப்பட்டிருந்த வேதம் கால மாறுபாட்டால் ஒருங்கிணைந்தது. பின்னர் இவை கிருஷ்ண த்வைபாயனர் எனும் வேத வியாசர் என்ற ரிஷியால் நான்காகப் பகுக்கப்பட்டதாகச் சொல்லப்படுகிறது. இவர் ரிக் வேதத்தை பைலர் என்ற சீடருக்கும், யஜுர் வேதத்தை வைசம்பாயனருக்கும், ஸாம வேதத்தை ஜைமினிக்கும், அதர்வ வேதத்தை ஸுமந்தருக்கும் கொடுத்தார் என்றும் கூறப்படுகிறது.

வேதம் இறை வடிவம் என்று சொல்லப்படும். இதற்கு 'சுருதி' என்று பெயர். எனவே சாஸ்திரமாகாது. சுருதியில் கூறப்பட்ட மெய்ஞான அனுபவங்களை விஞ்ஞான முறையில் விளக்கும் நூல் சாஸ்திரம் எனப்படும். வேதத்தை மாறுபாடின்றித் தெளிவாகப் புரிந்து கொள்ள வேண்டும் என்ற நோக்குடன் இதன் அங்கமாக பல சாஸ்திரங்கள் அமைக்கப்பட்டன. வேத அங்கங்கள் என்றும் உபவேதங்கள் என்றும் இரு பிரிவாக இவை மலர்ந்தன. சிக்ஷை, வியாகரணம், நிருக்தம், ஜ்யோதிஷம், சந்தஸ், கல்பம் என அங்கங்கள் ஆறு. ஆயுர் வேதம், கந்தர்வ வேதம், தநுர் வேதம், அர்த்தவேதம் என உப வேதங்கள் நான்கு.

வேதம் என்ற சொல்லிற்கே அறிதல், ஞானம் என்று பல பொருள்கள் உண்டு. கேவல மானுட அறிவைக் கொண்டு அறியப்பட முடியாத மாபெரும் வாழ்வியல் தத்துவங்களைக் கூறுவதால் வேதம் அபௌருஷேயம் அல்லது மானுட அறிவின் கண்டு பிடிப்புகள் அல்ல என்று கருதப்படுகிறது. இதன் முதல் இரு காண்டங்களான கர்ம காண்டமும், உபாசனா காண்டமும் இறுதியான ஞான காண்டத்திற்கு சாதனங்கள். கர்மமும் உபாசனமும் சித்த சுத்தியின் மூலம் சாதகனை ஞானத்திற்கு தகுதிப்படுத்துகிறது. ஞானமோ முக்தி நிலையைக் கொடுத்து விடுகிறது. எனவே இரண்டும் வேதங்களில் சாதனங்களாகக் கூறப்பட்டுள்ளன. வேத மந்திரங்களில் யாகம் முதலிய கர்மங்கள் 'ரிஷபம்' எனப்படும் காளையாகவும், ஞானம் 'அச்வம்' எனப்படும் குதிரையாகவும் உருவகப்படுத்தப்படும்.

ரிக்வேத மந்திரங்களே மிகக்குறைவான மாற்றங்களுடன் மற்ற இரு வேதங்களிலும் கையாளப்பட்டுள்ளன; அதர்வ வேதம் சற்றே மாறுபட்டு வருகிறது.

மெய்ஞான விளக்கமான வேதங்களில் சில சமுதாயப் பிரதிபலிப்புகளையும் காணலாம். பெண்கள் முழு உரிமையுடன் வாழ்ந்தனர் என்பதை பல வேதப் பாசுரங்களினின்று அறியலாம். போர்க்களம் புகும் வீராங்கனைகளைப் பற்றிய வர்ணனைகளையும், ஞான விளக்கான பொன்மணிச் சுடர்களையும் இவற்றில் காணலாம்.

ஞானத்திலும் ஆற்றலிலும், நாகரீகமான சமூக வாழ்விலும் நமது நாடு மற்றைய நாடுகளைக் காட்டிலும் மேம்பட்டே யிருந்தது என்பதையும் வேதப் பாசுரங்கள் விளக்கும். வேதப் பாசுரங்கள் நாகரீக வளர்ச்சியின் துவக்க காலத்தைக் குறிக்கவில்லை; அதன் உச்ச கட்டத்தில் எழுந்தவை. நாகரீக வீழ்ச்சியினின்றும், அறியாமைப் பிடிப்பினின்றும் பாரத சமுதாயத்தைக் காக்க எழுந்தவையே வேதங்கள்.

வேதங்களைப் பற்றி பல வகையான மாறுபட்ட கருத்துக்கள் நிலவி வந்தாலும் ஒரு உண்மையை மட்டும் எவரும் மறுக்கவோ அல்லது மறைக்கவோ முடியாது; வாழ்வின் இறுதி எல்லையை அறிய விரும்புகின்றவர்களுக்கும், உண்மைத் தத்துவத்தைக் காண விழைவோருக்கும், நாம் காணும் உலகம், அதன் தோற்றம், இருப்பு, மறைவு இவற்றின் உண்மை நிலையை ஊடுருவிக் காண விழைவோருக்கும் வழி காட்டும் ஒளி விளக்காய் இருப்பது வேதங்களே. உலகில் இன்று வேறு எந்த நூலும் இப்பெருமையைப் பெறவில்லை, பெறவும் முடியாது;

வேத கலாச்சாரமே பாரத கலாச் சாரம். வேத நெறியே பாரத நெறி. நாகரீகமே பாரத நாகரீகம். வேத சமுதாயமே பாரத சமுதாயம்.

நம் நாட்டின் தென் திசை மன்னர் பலர் வேதங்களை மிகவும் போற்றி யிருக்கின்றனர், காத்திருக்கின்றனர். ஒரு சோழ மன்னன் மாதவர் என்ற அந்தணரைக் கொண்டு வேதங்களுக்கு ஒரு உரை எழுதச் செய்தான். விஜய நகரப் பேரரசன் சாயனாச் சாரியாரைக் கொண்டு மிக அருமை யான ஒரு உரை எழுதச் செய்தான்.

நியூட்டன் புவி ஈர்ப்பு விசை பற்றி கண்டு பிடிப்பதற்கு முன்னரும் புவி ஈர்ப்பு விசை இருந்தது. அவர் கண்டு பிடிக்காமல் இருந்தாலுங்கூட இன்றைக்கும் என்றைக்கும் இவ் விசை அப்படியேதான் இருக்கும். அதுபோன்றே வேதமும் 'ரிஷி' என் பதாய் சொல்லப்படும் அனுபவ ஞானத்தின்மூலம் கண்டு பிடிக்கப் படும் முன்னரும் இருந்தது. இன்றும் என்றும் அழியாமலும் இருக்கும். இதனால்தான் இதனை அழியாச் சுட ராக, நந்தா விளக்காகக் கருது கிறோம்.

வேத மந்திரங்கள் யாகம், யக்ஞம், வழிபாடு போன்ற கேவல கர்மங் களுக்காக ஏற்பட்டவையல்ல. எனி னும் இக்கர்மங்களில் வேத மந்திரங் களை நாம் பயன்படுத்திக் கொள் கிறோம். பலர் கூறுவது போன்று லௌகீகம் வைதீகமென்றும், உல காயதம்-தெய்வீகம் என்றும் வேதம் வாழ்வைக் கூறுபடுத்தவில்லை. மாறாக வாழ்வனைத்துமே யோகமாக தெய் வீகமாகக் காண்கிறது. காணச் சொல்கிறது. ஒருவன் காணும், கேட்கும், அனுபவிக்கும் இந்த 'ஜகத்' முழுமையும் இறை வடிவம் பிரம்மமே என்று வேதம் பறை சாற்றுகிறது.

கடந்த நூற்றாண்டிலும் இன்றைய நூற்றாண்டிலும் வேதங்களுக்கு விளக் கம் அளிக்க முற்பட்ட பல மேனாட்டு அறிஞர்களும், நம் நாட்டு அறிஞர் களும் வேத நல்விளக்கின் உண்மை ஒளியினின்று நீண்ட தூரம் விலகி வந்துவிட்டனர். ஒரு எடுத்துக் காட்டின் மூலம் இதனைத் தெளிவாக உணரலாம்.

"अगस्त्यः कुम्भसंभवः ।।" 'அகஸ்த்யः கும்ப ஸம்பவः' என்று ஒரு வேத வாக்கியம். இவ்வாக்கியத்தை மொழி பெயர்த்த மேனாட்டு அறி ஞர்கள், 'பானையிலிருந்து தோன்றிய அகஸ்தியர் எனும் ரிஷி' 'Agasthya-a pot-born Rishi) என்று எழுதி விட்டனர். உடன் நமது பண்டிதர் களும் இதனையடி யொற்றியே விளக்கமளித்தனர். உண்மைப் பொருள் மறைந்து விட்டது.

இது எப்படியிருக்கிறது தெரியுமா? ஒரு உதாரணம் சொன்னால் புரியும். சென்னை நகரில் 'ஹாமில்டன் பிரிட்ஜ்' என்று ஒரு பாலம் உள்ளது; சென்னை வாழ் தமிழ்ப் பெரு மக்கள் தங்களது பிரத்யேகமான தமிழ் மொழியில் 'ஹாமில்டன்' என்பதை 'அம்பட்டன்' என்றும், 'பிரிட்ஜ்' என்பதை 'வாராவதி' என்றும் மொழி பெயர்த்தனர். 'அம்பட்டன் வாராவதி' என்று வழக்கமாக அழைக்கப்பட்டு வந்தது. நமது நாடு விடுதலை பெற்ற பின் நம் தலை வர்களாகிய அறிஞர்கள் அப்பாலத் தின் பெயரை திரும்பவும் தமிழி லிருந்து ஆங்கிலத்திற்கு மொழி பெயர்த்துப் புதிய பெயர் சூட்டினர். என்ன பெயர் தெரியுமோ? பார்பர்ஸ் பிரிட்ஜ்-Barber's Bridge! எப்படி யிருக்கிறது! இதே கதிதான் நமது சமய நூல்களுக்கும் நேர்ந்துவிட்டது.

மாக்ஸ் முல்லர் துவங்கி இன்று வரை நமது சமயம் பற்றி எழுதிக் குவிக்கும் மேனாட்டு அறிஞர்களுக்கு நமது மதத்தின்மீது என்ன அக் கறை? வேற்று மதத்தைச் சார்ந்த ஒருவர் நம் சமயத்தின்மீது உண்மை யிலேயே பற்று கொள்வாரா? எல் லோரும் சகோதரி நிவேதிதை யாகவும், ஸர் ஜான் உட்ராஃப்-ஆக வும் இருக்க முடியாது, இருக்கவும் இல்லை. அவர்களின் அடிப்படை நோக்கமும் தூய்மையாயில்லை;

பாரத சமுதாயம் வேதத்தின்மீது வைத்திருக்கும் நம்பிக்கையைத் தகர்க்க வேண்டும் என்பதே அவர் களின் நோக்கமாயிருக்க வேண்டும். உண்மையான கிருஸ்துவராக வாழ்ந் தவர் மாக்ஸ் முல்லர். இவர் வேதங் களையும் மற்ற பல நூல்களையும், நமது முன்னோர்களின் உரையின் உதவி கொண்டு மொழி பெயர்த்து வெளியிடுவதன் மூலம் ஹிந்துக்களா கிய இந்தியர்கள் வேதத்தின்மீது வைத்திருக்கும் நம்பிக்கையை விட்டு விட்டு கிறிஸ்துவ மதத்தைத் தழுவு வார்கள் என்று கருதினார்.

ரிக்வேத மொழி பெயர்ப்பை வெளியிட்டு முடிக்கும் தறுவாயில், அதாவது சுமார் 1868-இல் இவர் தன் மனைவிக்கு எழுதிய கடிதத்தின் மூலம் இதனை யறியலாம். அக்கடிதத் தில் கூறுகிறார்: "இப்போது நான் எழுதி முடித்துள்ள ரிக்வேத மொழி பெயர்ப்பும், மற்ற வேதங்களின் மொழி பெயர்ப்பும் இந்தியாவின் தலை விதியையும், பாரத சமுதாயத் தின் வளர்ச்சியையும் பெரிதும் பாதிக்கும் என்பதில் எனக்கு சிறிதும் ஐயமேயில்லை. வேதமே இந்திய சமு தாயத்தின் ஆணி வேர். இந்த வேரைப் பற்றி கூறி, எடுத்துக் காண் பித்தும் விட்டேன். இது போதும். கடந்த மூவாயிரம் ஆண்டுகளாக ஹிந்து சமுதாயம் எந்த வேரின் பலத்தில் நிற்கிறதோ அந்த மூல வேரைப் பிடுங்கி எறியும் வழி இது தான். எனது மொழி பெயர்ப்புகள் மூலம் இதனை நிறைவேற்றி விட் டேன்."

ஆனால், பாவம், நடந்ததோ எதிர் மறையாகத்தான். பௌத்தரையும், ஜைனரையும், சார்வாகரையும் வெற்றி கொண்டு தன்னுள் ஐக்கியப் படுத்திக் கொண்ட ஹிந்து மதத்தின் முன் நம் முயற்சி பலிக்காது என்

பதை மாக்ஸ் முல்லர் போன்றவர்கள் உணராததில் வியப்பில்லை. எனவே நமது சமய நூல்களின் உண்மைக் கருத்து யாது என்பதை ஒவ்வொரு ஹிந்துவும் அனுபவத்தில் யோக வாழ்வு வாழ்ந்து கண்டறிய வேண்டும். வேத நல்விளக்கு ஊத்திய ஜோதி, அமரதீபம் என்பதை ஒவ்வொருவர் வாழ்வும் வாக்கும் வெளிச்சம் போட்டுக் காண்பிக்க வேண்டும். இதுவே வேதத்திற்கு விளக்கம், வேத நற்பணி.

इतिहास पुराणाभ्यं वेदं समुपबृह्मयेत् ।
यो न वेद पुराणां हि न स वेदोऽत्र किञ्चन॥

இதிகாஸ புராணுப்யாம் வேதம் ஸமுபப்ரஹ்மயேத் ।
யோ ந வேத புராணம் ஹி ந ஸ வேதா அத்ர கிம்சன ॥

"இதிகாசங்களும் புராணங்களும் வேதங்களுக்கு உரைகள் என்றே கருதப்படுகின்றன. இதிகாச புராணங்களை அறியாதவன் வேதத்தை நன்கு அறியான்."

இதிகாசங்களும் புராணங்களும் வேதங்களுக்கு உரைகள் ஆதலால் வேதங்களைப் பற்றி தெளிவாக, முழுமையாக அறிய விரும்புவோர் இவற்றின் துணை கொண்டே வேதங்களை அணுக வேண்டும். இதிகாச புராணங்கள் வரலாறு அல்ல; வேதம் போன்றே இவையும் அநாதி, அபௌருஷேயம். முரண்பாடான கருத்துகளுக்கு இவற்றில் இடமேயில்லை.

மாலவன் துணை கொண்டு மறைபொருளை விளக்கம் காண முயலுவோம்.



(20-ம் பக்கத் தொடர்ச்சி)

பெரிய பள்ளம் ஒன்றை வெட்டி வைத்து, இலை, தழைகளால் அதை மூடி வைப்பர். அதன் அருகில் பெண் யானை ஒன்றை நிறுத்தி வைப்பர்.

பெண் யானையோடு சேர்ந்து மகிழ விரும்பும் ஆண் யானை, ஸ்பரிச சுகத்தை விரும்பி வந்து பள்ளத்தில் விழுகிறது; வேடர்கள் பலமான சங்கிலிகளால் அதைக் கட்டி, தம் வசமாக்கிக் கொள்ளுகின்றனர்.

ஆக, ஆண் யானை ஸ்பரிச சுகத்தால் தன்னை இழக்கிறது.

செம்படவர்கள் மீனைப் பிடிக்க எண்ணுகின்றனர். சுவையான ஊன் உணவைத் தூண்டியில் வைத்து தடாகத்தில் எறிகின்றனர்; அத்தசையை ருசியுடன் உண்டு மகிழ விரும்பும் மீன், அதை உண்டு தன் உயிரையே இழக்கிறது;

ஆக, மீன், ரசத்தால் அழிகின்றது.

அசுணம் என்பது ஒரு பறவை. குறிஞ்சி நிலத்தில் வாழும் அப்பறவை இசையின்பத்தில் தன்னையே மறந்துவிடும் தன்மை வாய்ந்தது.

அதைப் பிடிக்க எண்ணுபவர்கள், அப்பறவை வாழும் பகுதிக்குச் சென்று இனிய ஓசையை எழுப்புவார்கள்.

அவ்இனிய ஓசையில் தன்னை மறந்திருக்கும் அப்பறவை கேட்குமாறு நாராசமான பறையொலியையும் எழுப்புவர். அதனால் மயங்கி அப்பறவை விழுந்து விடும். அதைப் பிடித்துக் கொள்வர்.

அசுணம், சப்தத்தால் அழியும்

வண்டுகள் மலரின் மணத்தால் கவரப்பட்டு, மலரில் சென்று தங்க, அம்மலர் மூடிக் கொள்ளும்போது உயிரை இழக்கிறது.

எனவே, வண்டு கந்தம்-மணம் என்னும் புலனால் அழிகிறது.

விட்டில் ஒரு வகைப் பூச்சி.

அப்பூச்சிக்கு ஒளி என்றால் பிரியம் அதிகம்.

எனவே, எரிந்து கொண்டிருக்கும் தீப ஒளியில் மயங்கி அங்குச் சென்று, ஒளியைத் தீண்ட, அது இறக்கின்றது.

ஆக, விட்டில் பூச்சி ரூபத்தால் அழிகிறது.

இவைகளைப் போல் நாமும் அழிகிறோம்.

கண் என்ற பொறியால் ரூபம் என்ற புலனும், காது என்ற பொறியால் சப்தம் என்ற புலனும், மூக்கு என்ற பொறியால் கந்தம் என்ற புலனும், நாக்கு என்ற பொறியால் ரசம் என்ற புலனும், மெய் என்ற பொறியால் ஸ்பரிசம் என்ற புலனும் அழிகின்ற பாதகர்களே, நீங்கள் திருவேங்கடச் செல்வரின் சிவந்த பாதங்களைத் தொழுது உய்ய வாருங்கள் என அழைக்கின்றார்...

பாட்டு இதோ...

"சிறக்கும் பதம்தருவார் திருவேங்கடச் செல்வர் செய்ய
நிறக்கும் பதம் தொழுதுய்ய எண்ணீர் நெறியிற் பிழைத்து
மறக்கும்பத் தந்தியும் சேலும் அசுணமும் வண்டினமும்
பறக்கும் பதங்கமும் போல் ஐவரால் கெடும் பாதகரே!

—திருவேங்கடத் தந்தாதி-28.

தந்தி—யானை.

சேல்—மீன்.

பதங்கம்—விட்டில்.

●

# திருவேங்கடமலை வரலாற்று மாலை

8

## இயற்பாவை முதலிலும் கண்ணிநுண் சிறுத்தாம்பை இறுதியிலும் ஓதும்படி ராமானுஜ முனிவர் உத்தரவு செய்தல்

இனித் திருவேங்கடமலைத் திருக்கோவில் முதலான இடங்களில் திவ்யப் பிரபந்தத்தைப் பூர்ணமாக ஓதும் ஸந்தர்ப்பங்களில், முதலாழ்வார்களின் திவ்யப்ரபந்தங்களை முதலில் ஓதுவதற்கும், இறுதியில் தனியாக ஒருநாளில் மதுரகவியாழ்வாரின் திவ்யப்ரபந்தத்தை ஓதுவதற்கும் ஏதுவான வரலாறுகள் கூறப்படும்.

ஒருகால் ஸ்ரீராமாநுஜமுனிவருக்கு, ஆழ்வார்கள் அருளிச் செய்த திவ்ய ப்ரபந்தங்களை உபதேசித்த ஆசார்யரும் எழுநூறு தமிழ்க்கவிஞர் பெருமக்களுக்குத் தலைவராகப் பட்டாபிஷேகம் செய்யப்பட்டவரும் ஸ்ரீ ரங்கநாதனது திருமேனியழகை அனுபவிப்பதில் ஈடுபட்ட திருவுள்ளமுடையவரும் தேவகான முறையின்படித் திவ்யப்ரபந்தங்களைப் பாட வல்லவரும் அதுவே காரணமாக ஆளவந்தாரால் முனிவாஹனர் (திருப்பாணாழ்வார்) என்று மறுபெயரிடப் பெற்றவரும் ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையரென்று பிரசித்தியடைந்தவருமான ஆசார்யர் தலைவர் ஒரு கால் ஸ்ரீரங்க க்ஷேத்திரத்தில் திருக்கார்த்திகைத் திருநாளில் திருவரங்கப் பெருமானுக்கு மங்களாசாஸனம் செய்துவிட்டு ஸ்ரீராமானுஜராகிய யதிராஜருடைய மடத்திற்கு எழுந்தருளி, அவ்விராமாநுசரால் எதிர்கொண்டு வந்து வணங்கி வழிபடப்பெற்று, ''வாரீர் இராமானுச முனிவரே திருவேங்கடயாத்திரையை ஆழ்வார்கள் விசேஷமாகக் கொண்டாடுகிறார்கள்;

ஆழ்வார்களில் தலைவராய்ப் பூஜிக்கத்தக்க நம்மாழ்வார் திருவாய்மொழி மூன்றும்பத்து மூன்றும் பதிகம் பத்தாம் பாசுரத்தில்—(மனிதர்காள் எம்பெருமான் உங்கட்கு) ஏற்படுத்தி வைத்த ஆயுளின் முடிவான எல்லையை (நீங்கள்) குறுகி இந்திரியங்கள் (பொறிகள்) தளர்ந்து (மனமும்) வலிமையிழப்பதற்கு முன்பே பரந்த படங்களோடு கூடின ஆதிசேஷனைப் படுக்கையாகக் கொண்ட பெருமானுடையதாய்ச் செறிந்த சோலையையும் அழகிய மலர் மயமாய் விசாலமான தாழ்வரைகளையும் பெற்ற திருவேங்கடமலையைச்சென்று அடையுங்கள்—என்றும்,

அறுசமயக் கடலின்கண் ஸாராஸாரப் பொருள்களைக் கரைகண்ட பூஜிக்கத்தக்க திருமழிசையாழ்வார் நான்முகன் திருவந்தாதி நாற்பத்திரண்டாம் பாசுரத்தில் — மிகவும் உயர்த்தியையுடைய திருவேங்கடமலையைச் சென்று வணங்குமின்கள். அது தனது நற்பண்பினால் நிலைத்து நின்று பாவங்களைப் போக்கும். அங்கு, நறுமணம் மிக்க தாமரை மலரில் சேர்ந்த நான்முகக் கடவுளும் முக்கண்ணனுமாகிய இருவரும், எல்லாத் தேவராலும் அசுரராலும் வணங்கத் தக்க விஷ்ணுவின் திருவடிகளில் தாமரை மலர்களை ஸமர்ப்பித்துத் துதிக்கின்றனர்—என்றும்,

அவர்தாமே திருச்சந்த விருத்தம் எண்பத்தோராம் பாட்டில்—(தான்) கடைந்த பாற்கடலில் பள்ளிகொண்டருளிக் காலநேமியென்னும் அசுரனை வென்று மனங்கலங்கிய இந்திர புத்திரனை வாலியின் தம்பியாகிய சுக்கிரீவனுக்கு உதவி செய்வதற்காக இராமனாய் அவதரித்து நெருங்கிய ஏழ்மரங்களையும் அம்பெய்துதுளைத்து விட்டுத் திருவேங்கடமலையை அடைந்த திருமாலாகிய தலைவனது பாதங்களையே நாடோறும் பற்றி அமைதியாக வாழுங்கள் — என்றும் அருளிச் செய்தனர்.

திரு. தி. அ. கிருஷ்ணமாசாரியர்,
சிரோமணி—வித்வான், திருப்பதி.

இங்ஙனமே பலவிடங்களிலும் ஆழ்வார்கள் ஆசையோடும் மகிழ்ந்தும் புகழ்ந்துபாடிய திருவேங்கட யாத்திரையைச் செய்து திரும்பி வருகிறேன்'' என்று கூறி இராமானுச முனிவரின் இசைவைப் பெற்றுத் திருவேங்கடமலைக்குப் புறப்பட்டு நடுவழியில் ஸ்ரீகாஞ்சிமாநகரில் ஸ்ரீதேவராஜரென்று பிரசித்தராய்க் கேட்போர் கேட்பதை எல்லாம் வழங்கும் விரதம் பூண்டவருமான வரதராஜப் பெருமாளை வணங்கி, திருவேங்கடமலையடிவாரமாகிய திருப்பதியை அடைந்து இராமானுச முனிவரின் அபிமானத்திற்கு இலக்கான ஸ்ரீகோவிந்தராஜப் பெருமாளைத் தொழுது, திருவேங்கடமலையேறும் படி வழித்தொடக்கத்திலுள்ள புளிய மரத்தையும் அதன்கீழ்க் குண்டுக்கல்

(ஸ்ரீமத் அனந்தார்யர் அருளிய ஸ்ரீ வேங்கடாசல-இதிஹாஸ மாலாவின் தமிழ் மொழிபெயர்ப்பு)

வின் மீது விளங்கும் திருவேங்கடமுடையான் திருவடித்தாமரையிணையையும் அதன்பக்கத்தில் ஸேவை ஸாதிக்கும் நம்மாழ்வார் கலியன் முதலிய ஆழ்வார்களையும் பின்பு திருமலையேறும் நடுப்பாதையில் பிரகாசிக்கும் காட்டழகிய சிங்கரையும் தொழுது ஏறிக் கல்வேலியளவும் சென்று, பின்பு திருமலையனந்தாழ்வானால் எதிர்கொண்டழைக்கப்பட்டு ஒருவருக்கொருவர் வணங்கி நல்வரவு கூறி யோகக்ஷேமம் விசாரித்தல் நடந்த பிறகு அனந்தாழ்வானோடு பேசிக்கொண்டே சென்று திருவேங்கடமுடையான் திருக்கோவிலின் பெரிய கோபுர வாசலின் முன்பு தண்டனிட்டுப் பெரிய திருவீதிகளில் பிரதக்ஷிணமாக வந்து புகழ் பெற்ற ஸ்வாமி புஷ்கரிணியில் நீராடி நித்யானுஷ்டானத்தைச் செய்து, நம்மாழ்வார் அருளிய திருவிருத்தத்தில் — (நான் கூறுவது யாரும் கேளாமையாலே) பொருளற்ற பேச்சாகவே ஆகட்டும்: வீசுகின்ற அலைகளைக் கொண்ட பிரளயக் கடலிலிருந்து உலக முழுவதையும் வராகவுருவந்தரித்து எடுத்து மஹோபாரம் செய்தவனும் மிகப் பெரிய கற்பக மரங்கள் நிறைந்த சுவர்க்கத்தில் உள்ளவர்க்கும் அல்லாத மனிதர்க்கும் மற்ற எல்லார்க்கும் விளக்கமாய் உயர்ந்ததாய் விளங்குகின்ற (மோக்ஷோபாயமான) ஞானத்தை விதித்து உதவி புரிந்தவனுமான பெருமானையல்லது நான் கண்ட நல்ல பொருள் வேறொன்றில்லை—என்னும் பொருள் பெற்ற தொண்ணூற்றொன்பதாம் பாசுரத்தைச் சொல்லி அவ்வாழ்வாருக்கு இஷ்டரான ஸ்ரீ ஜ்ஞாநவராஹப் பெருமாளுக்கு மங்கள சாஸனம் செய்து, மறுபடியும் திருவேங்கடவன் கோயிலின் பெரிய கோபுரவாசலின் முன்பு தண்டனிட்டு, ஸேவிக்கும் முறைப்படி கோவிலில் பலிபீடம் த்வஜஸ்தம்பம் இவற்றினருகே தண்டனிட்டுத் திருமடைப்பள்ளி நாச்சியாரைத் தொழுது ஸ்ரீ தேவியின் தீர்த்தமாகிய அழகப்பிரானார் திருக்கிணறென்னும் மறுபெயரையுடைய பொற்கிணற்றை (பங்காருபாவியை) வலம் வந்து ஸ்ரீமதானந்த நிலைய விமானத்தை ஸேவித்து ப்ரதக்ஷிணமாக வந்து தொட்டித் தீர்த்தத்தில் பெருமாள் தீர்த்தம் பருகி ஸ்ரீஸேனை முதலியாரையும் பின்பு வேங்கடத்தரியெனப்படும் நரஸிம்ஹப் பெருமாளையும் வணங்கி, கருடாழ்வாரை வலம்வந்து (த்வாரபாலர்களும் கருடாழ்வாரும் எழுநதருளியுள்ள) ஸ்ரீக்ருஷ்ண மண்டபத்தை அடைந்து த்வாரபாலர்களின் அருகே நின்று, கோலம் செய்த மதயானை போல் விளங்குமவனும் பெரியாழ்வார் திருமொழி முதற்பத்து ஆறாந் திருமொழியின் 'செங்கமலக் கழலில்' என்று தொடங்கும் பத்தாம் பாசுரத்தில் கூறியபடி ஸகல திருவாபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டவனுமாகிய ஸ்ரீநிதியை (மூல மூர்த்தியை) தரித்திரன் பெருநிதியைக் கண்டாற்போல் தூரத்திலிருந்து கண்டு அப்பாசுரத்தை அனுஸந்தித்துக்கொண்டே மகிழ்ச்சியுடனும் மயிர்க்கூச்செறிதலுடனும் ஸேவித்து வாசலுக்குள்ளே சென்று, தமது ஆசாரியராகிய ஆளவந்தார் அருளிய ஸ்தோத்ர ரத்னத்தை-மூன்றடிகள் வைத்து (மூவுலகுமளந்)

## "ஏகாந்த சயனன்"

பச்சைநிற துளசிதனில் மணமிருக்கும்
பரந்தாமன் சன்னதியில் அருளிருக்கும்
இச்சகத்து உள்ளமெல்லாம் உனைநினைக்கும்
உன்திருவடி தொழுதார்க்கு யாவுமினிக்கும்

நாட்டவர்தம் வாட்டமதை தீர்க்கின்றாய்
நித்தம்நித்தம் நல்வழியில் சேர்க்கின்றாய்
கூட்டமுது பக்திகுரல் கேட்கின்றாய்
கேட்டவர்க்குக் கேட்டதைநீ கொடுக்கின்றாய்

ஆசையுடன் திருமலைக்கு வருவோரையும்
அள்ளியள்ளி பொன்பொருளை தருவோரையும்
ஓசையின்றி உள்ளத்தாலே துதிப்போரையும்
உன்னைமட்டும் காலமெல்லாம் மதிப்போரையும்

ஆனந்த சயனத்தில் எண்ணுகின்றாய்
அன்புகொஞ்சும் திருக்காட்சி கண்டதுண்டு
நானந்தத் திருக்காட்சி கண்டதுண்டு
நீலக்கண்ணன் தெய்வாம்சம் கொண்டதுண்டு

உண்டியலில் வழிந்தோடும் செல்வங்களால்
உலகத்தார் பெருங்கலியைத் துடைக்கின்றாய்
பண்டிதரின் புலவர்களின் கவிஞர்களின்
பொல்லாத வறுமையையும் அறுக்கின்றாய்

அவதாரம் அத்தனையும் ஏகாந்தம்
அகத்துக்கோ மெய்ஞானப் பெருஞ்சாந்தம்
தவதாரம் திருமகளின் நற்கணவா
தித்திக்க எத்திக்கும் உரைபவா வா!

**கவியன்பன்—ஈரோடு.**

தவனே சங்கு சக்கரம் கற்பக மரம் கொடி தாமரை மலர் மாவட்டி வஜ்ராயுதம் ஆகியவற்றை (இரேகை வடிவத்தில்) அடையாளமாகப் பெற்ற உன்னுடைய திருவடித் தாமரையிணையானது என்னுடையதான தலையை எப்போது அலங்கரிக்கப் போகிறது — என்னும் பொருள் கொண்ட 'கதா புந:' என்னும் ச்லோகம் வரையில் அனுஸந்தித்துக் கொண்டேயிருக்க, இந்த அரையரை 'ஸ மஹாத்மா ஸுதுர்லப:(அப்படிப் பட்ட பெருமை வாய்ந்தவர் கிடைத்தற்கு மிக அரியவர். கீதை 7—9) என்று கூறப்பட்ட பெருந்தகுதியுடையவராக எண்ணிய திருவேங்கடமுடையான் அர்ச்சகர் மூலமாக ஆழ்வார் திருவரங்கப்பெருமாளரையரை அருள்பாடிட்டு(அழைத்தருளி) 'அடிக்கீழ் அமர்ந்து புகுந்து அடியீர் வாழ்மின்' (திருவாய்மொழி 6-10-11) என்று கூறியருளியபடி நியமிக்க, அரையரும் பரமானந்தம் பொங்கிய உள்ளத்தராய் அருகே சென்று 'படியாய்க்கிடந்து உன் பவளவாய் காண்பேனே' (பெருமாள் திருமொழி 4–9) என்று குலசேகராழ்வாரின் பாரிப்பை அனுஸந்தித்துக் கொண்டு அங்குள்ள பொற்படியைக் குலசேகராழ்வாராகவே பாவித்து அதனைத் தாண்டாமல் அதனருகிலே நின்று முற்கூறிய திருவாய்மொழியில் ஆறும் பத்து பத்தாந் திருவாய்மொழியை முதலிலிருந்து அனுஸந்தித்து வந்து அதன் பத்தாம் பாசுரத்தில் கூறியருளியபடி 'அலர்மேல் மங்கையுறை மார்பா உன்னடிக்கீழ் அமர்ந்து புகுந்தேன்' என்று பிராட்டியைப் புருஷகாரமாக (சிபாரிசு செய்பவளாக) முன்னிட்டுப் (பெருமாளைத் தஞ்சமாகப் பற்றுதலாகிய) பிரபத்தியைச் செய்து, திருவாபரணங்களின் அழகையும் திருவடி தொடங்கித் திருமுடிவரையிலான திவ்யமான அவயங்களின் அழகையும் அனுபவித்துக் கொண்டிருக்க, பின்பு திருவேங்கடமுடையான் தீர்த்தம் ப்ரஸாதம் ஸ்ரீசடகோபன் உடுத்

# வேங்கடத்துப் பெருமானே விழைந் தருள்க!

கவிஞர் வி. மு. உலகநாதன்—சென்னை.

முன்பெல்லாம் உன்புகழை உணர்ந்தே னில்லை;
முறைசெய்யும் உன்திறத்தை அறிந்தே னில்லை;
புன்செயலால் உனைநினையா திருந்தேன்; ஆன்மப்
புத்தியினால் தலைப்பட்டே வாழ்ந்தேன் இல்லை;
என்புலன்கள் இழுத்தலைத்தப் போக்கில் நானும்
இடர்ப்பட்டேன் அறிவதனை வீண டித்தேன்!
உன்படைப்பின் உயிர்கள்தம் செயலை யெண்ணி
உணராமல் கண்ணுநான் துயர முற்றேன்!

ஈரநெஞ்சம் இல்லாத கௌர வர்கள்
இன்னலுற அடியோடு மாய்த்தாய்! என்றும்
சீராகப் போற்றிவந்த பாண்ட வர்க்கே
சிந்தைவிழைந் தருள்புரிந்து காத்தாய்! பூமி
பாரத்தைப் போக்கப்பெருஞ் சேனை யெல்லாம்
பட்டொழிய செய்தபரஞ் சுடரே! உன்றன்
தீரத்தை அறச்செயலைப் போற்றி டாமல்
திறனிழந்து தெளிவின்றி உனைம றந்தேன்!

அருளாளா! நீசெய்த ஆற்றல் கண்டே
அகமகிழ்ந்து தியானத்தால் கண்ணீர் மல்கிப்
பெருகிவரும் கண்களுடன் உருகும் நெஞ்சால்
பிரியமுற்றே உனைப்போற்றிப் பாடி டாமல்
அருவருக்க உடல்பருத்து வயிற்றுப் பையை
அனுதினமும் நிரப்பிடவே முனைந்தேன்! போற்றி
உருக்கமுடன் உனைத்துதிக்கும் உத்த மர்தம்
உணர்வதனை அறியாமல் இழிந்தோன் ஆனேன்!

சிறப்பருளும் தீர்த்தங்கள் சூழ்ந்தி லங்க,
தெளிவுடைய தண்ணருவி பொழிய, பச்சை
நிறைந்தபொழில் வேங்கடத்தின் வடதி சையில்
நின்றொளிரும் பெருமானே! பல்வே றான
அறங்கூறும் திருப்பெயர்கள் கொண்டாய்! அந்த
அருட்பெயரை அனைத்தையுமே வாயால் பாடி
முறைப்படுத்திப் பதித்தவரைப் பித்தர் என்றே
மூடன்நான் பழித்துரைத்தேன்!
வழுக்கி வீழ்ந்தேன்!

ஊரெங்கும் நீயிருந்து வாழ்தல் தன்னை
உய்த்துணர்ந்தோர் அங்குவந்தே உன்னைப்
போற்றும்
பேர்பெற்ற அடியார்கள் எல்லாம் உன்றன்
பிரியரெனத் திகழ்ந்திட்டார்! திருநா மத்தை
ஆர்வமுடன் அமரரெல்லாம் பாடி ஆடி
அருள்தன்னைப் பெற்றுரை இழித்துப் பேசி
நேர்மையிலே பிறழ்ந்திட்டேன்! என்னைக் கண்ணு
நீதிருத்தி உனைப்பாடச் செய்வாய் வண்ணு?

துக களுநத பதக வாடை எப்போதும் அர்ச்சித்த மலர்க் கூட்டங்களினுல் கமகமவென்று பரிமளம் வீசப் பெற்ற தன் திருவடித்தாமரையினை ஆகியவற்றை அருளுதல் முதலான உபசாரத்தினுல் கௌரவித்து, 'வாரீர் விண்ணப்பம் செய்யும் அரையரே நம்மிராமாநுச முனிவரின் திவ்யப்ரபந்தாசாரியரான நீர் நமது எல்லையற்ற அன்புக்குக் கொள்கலமாயிருக்கிறீர்' என்று கூறிப் பின்பு 'வ்யாஸ பராசரர்களால் முன்பு பணிக்கப்பட்ட நூல்கள் போல், முதன் முதலில் முதலாழ்வார்கள் எனப்படும் பொய்கையார் பூதத்தார் பேயார் என்ற பெயர் பெற்ற ஆழ்வார்களால் அருளிச் செய்யப்பட்டு நம்மைப் பற்றியவையும் நமக்கு மிகப் பிரியமானவையுமான திவ்யப்ரபந்தப் பாசுரங்களில் ஏதாவதொரு பாசுரத்தைக் கானம் செய்யக் கடவீர்' என்று நியமிக்க, அரையர் மிகவும் நீசனுன அடியேனை ஆழ்வார்களிடம் தான் வைத்துள்ள அன்புக்கு வசப்பட்ட பகவான் இங்ஙனம் நியமித்தருளுகிறுனென்றெண்ணிப் பெருமகிழ்ச்சி கொண்டு முதலாழ்வார்கள் அருளிய பிரபந்தங்களில் முதற்பாட்டு முடிவுப் பாட்டுக்களையும் இரண்டாந்திருவந்தாதியில் ('மனத்துள்ளான் வேங்கடத்தான்' 'நெறியார் குழல் கற்றை') இருபத்தேழாம் பாசுரத்தையும் ஐம்பத்துமூன்றும் பாசுரத்தையும் தேவகான முறைப்படிப் பாடி, அதனுல் முத்தி பெற்றவன் ஸாமகானத்தினுல் பரமபதநாதனை மகிழ்விப்பது போன்று திருவேங்கடமுடையானை மகிழ்விக்க, அதற்கு மிக மகிழ்ந்த பகவான் மறுபடியும் தீர்த்தம் ஸ்ரீசடகோபன் முதலியவைகளை ஸாதித்து உபசரிக்கப் பெற்றுத் திருப்தியடைந்திருக்க, பின்பு அனந்தாழ்தான் 'வாரீர் ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையரே தேவரீர் நாளை முதலாக இங்கு நடைபெறும் திருவத்யயனுேத்ஸவத்தில் ஆழ்வாரருளிச் செயல்களைத் திருவேங்கடநாதனை திருச்செவிகட்கு இனிமையாகத் தேவகான முறைப்படிப் பாடக்கடவீர்' என்று விண்ணப்பிக்க, அது கேட்ட அரையர் அதனைத் திருவேங்கடவனது திருவாணையாகவே கருதி மறுநாள் தொடங்கிப் பெரியாழ்வார் அருளிய திருப்பல்லாண்டு முதலாக முறைப்படி நாள்தோறும் திவ்யப்ரபந்தங்களைப் பாடி மனநிறைவு பெற்று உத்ஸவம் முடிந்தவுடன் திருமலையனந்தாழ்வானுல் அன்போடு விசேஷமாகக் கௌரவிக்கப் பெற்றுத் திருவேங்கடமுடையானிடம் அனுமதி கொண்டு திருவரங்கம் சென்று சேர்ந்து ஸ்ரீ ராமாநுஜ முனிவரிடம் சென்று அவரால் வணங்குதல் முதலியவற்றுல் கௌரவிக்கப் பெற்றவராய், வாரீர் இராமாநுச முனிவரே தேவரீருக்கு திவ்ய ப்ரபந்தங்களை உபகரித்தேனென்பதனுல் என்னிடம் திருவேங்கடவன் செய்த திருவருளின் பெருமை வாசகங்கட்கு எட்டாதது' என்று கூறி, திருவேங்கடமுடையான் முதலாழ்வார்களருளிய திவ்யப்ரபந்தங்களைப் பாடும் படிக் கட்டளையிட்டதையும் பின்பு திருமலையனந்தாழ்வான் அத்யயனுேத்ஸவத்தில் அருளிச் செயல் முழுவதையும் பாடுமாறு பணித்ததையும் மேலும் நடந்த எல்லாவற்றையும் ராமாநுஜமுனிவரிடம் தெரிவித்தனர்.

இவ்வரையரைப் பற்றிப் பெரியோர் ஒரு ச்லோகத்தை அருளினர். அதன் கருத்து—யாவரொரு கவிஞர் பெருமான் ராமாநுஜ முனிவருக்கு நம்மாழ்வாருடைய நல்ல ஸ்ரீஸூக்திகளை உபதேசித்தாரோ, யாவரொருவர் திருவேங்கடமுடையானது திருவாணை கொண்டு அவர் முன்பே அயோநிஜரான (ஒருதாய் வயிற்றில் பிறவாத) முதலாழ்வார்களின் ஸ்ரீஸூக்திகளைத் தேவ கானத்தில் பக்தியோடு பாடினுரோ, அத்தகைய முநிவாஹனரென்னும் பெயர் பெற்றவரும் ஸ்ரீமந்நாதமுனிகளின் குலத்தில் உதித்தவருமான திருவரங்கப் பெருமாளரையரென்ற ஆசாரியரை ஸேவிக்கிறேன்—என்பதாகும்.

(தொடரும்)

## அறிவிப்பு

திருமலையில் கல்யாணுேற்சவம் போன்ற ஆர்ஜித சேவைகளுக்காக பக்தர்களால் எம்.ஓ. மூலம் அனுப்பப்படும் தொகையை தி. தி. தேவஸ்தானம் ஏற்றுக் கொண்டாலும், அம்முறை சில நிருவாக சிக்கல்களையும், கால தாமதத்தையும் ஏற்படுத்துவதால், பக்தர்கள், அனுப்ப வேண்டிய தொகையை டி. டி. (D. D.) மூலம் அனுப்பினுல் மேலாண்மைக்கு அம்முறை உதவியாக அமையும். மேலும் ஆந்திரா வங்கி மற்றும் சில வங்கிகள் இது போன்று தி. தி. தேவஸ்தானத்தின் பெயரில் வழங்கப்படும் டி.டி.களுக்கு எவ்விதக் கட்டணமும் பெற்றுக் கொள்வதில்லை.

# ★ அவனடி சரணம் ★

திரு. ஜி. சுப்பிரமணியன்-மதுரை.

விஷ்ணுவின் அவதாரங்களில் கண்ணனின் அவதாரம் பூரணமானது. துஷ்ட நிக்ரஹ சிஷ்ட பரிபாலனம் செய்வதற்காக மட்டுமின்றி, மக்கள் வாழும் நெறியைக் காட்டிய கார் மேக வண்ணன் அவன்.

அவனுடைய அவதாரத்தின் நோக்கம் 3 அம்சங்களைக் கொண்டது.

"தர்ம சம்ஸ்தாபனார்த்தாய சம்பவாமி யுகே யுகே" என்று அவனே திருவாய் மலர்ந்தருளியபடி, தர்மத்தைப் பரிபாலனம் செய்ய அவன் மானுட உருக் கொண்டு இந்த மண்ணில் தோன்றினான். அத்துடன் குருக்ஷேத்ரத்தில், மகாபாரத யுத்தம நடந்தபோது அதில் முக்கிய பங்கு ஏற்று நடத்தியவன் இந்த மாயக் கண்ணனே. அர்ஜுனன் வாயிலாக இந்த உலக மாந்தர் அனைவரும் உய்ய வழிகாட்ட கீதையை உபதேசித்தது இந்த குருக்ஷேத்திர களத்தில்தான்.

மூன்றாவதாக, பக்தி மார்க்கத்தை உலக மக்களுக்கு காட்டி, இக்கலியுகத்தில் விரைவில் மோக்ஷ நிலையை எய்த பக்தி மார்க்கமே சிறந்தது என்று நிலை நாட்டியவன். அத்தோடு, அதர்மத்தை மட்டும் அழிப்பது அவன் குறிக்கோள் அல்ல. ஆண்டவனின் தெய்வீக சக்தியை புலப்படுத்தியதும் இந்த அவதாரத்தில் தான்.

தீயவர்களை அழிப்பது மட்டும் இறைவனது நோக்கமல்ல. கண்ணுக்குப் புலப்படாத, ஆனால் அதே சமயம் மிகவும் வலுமிக்க "ராட்சஸனை"-மனிதர்களிலேபெரும்பாலோரது மனதிலே குடி புகுந்துள்ள "தீயவனை"-வெற்றி கொள்ள வேண்டும்.

It is not a mere physical eradication but a mental transformation that has to be achieved.

இதுவே அவதாரத்தின் முக்கிய கோட்பாடாகும். வாலிக்கு மரணத் தருவாயில் விவேகம் ஏற்படுகிறது.

" ஆவிபோம் வேளைவாய் ஏவுகூர்
வாளியால்
அறிவு தந்தருளினை"

என்று இராமனை மெய்ஞ் ஞானத்தால் அறிந்து துதிக்க ஆரம்பிக்கிறான். அதுவரை அவனிடம் ஆணவம் இருந்தது. 'நான்' என்ற அகம் பாவம் நீங்கி அறிவு தெளிவடைந்த போது, இறைவனது அருளைப் பரிபூரணமாக அனுபவிக்க கொடுத்து வைக்கவில்லையே என்று வருந்துகிறான். அவனிடம் மனமாற்றம் ஏற்படுகின்றபோது மாயை அகலுகின்றது. ஞானம் பிறக்கிறது.

இராமன் தன்னை மனிதனாகவே மதிக்கப்பட வேண்டும் என்று கூறுகின்றான். தன்னை தெய்வத்தின் திருஅவதாரமாக அவன் காட்டிக் கொள்ள விரும்பவில்லை.

"ஆத்மாநம் மாநுஷம் மந்யே" என்றே தன்னைக் காட்டிக் கொள்ள விரும்புகிறான் ஸ்ரீராமன். வால்மீகியும் 'நரபுங்கவனின்' சரிதமாகவே இராமாயணத்தை இயற்றியிருக்கிறார். சமஸ்த கல்யாண குணங்களும் நிறைந்த மனிதன் இன்றைக்கு யார் இருக்கிறார்? அவனைப்பற்றித் தெரிந்து கொள்ள ஆசைப்படுகின்றேன் என்று நாரதரிடம் கேட்கும் போது, 'ஞாதும் ஏவம் விதம் நரம்' என்றேதான் பேசுகிறார். நாரதரும் இராமனின் கல்யாண குணங்களை விவரித்து விட்டு, 'ஸ்ரூயதாம் நர:' என்றே கூறுகிறார்.

ஆனால், கண்ணனோ, தானே சகலமும் என்றே நிலைநாட்டுகிறான்.

अहं सर्वस्य प्रभवो
मत्तः सर्वं प्रवर्तते
इति मत्वा भजन्ते मां
बुधा भावसमन्विताः ॥

என்று கூறுகிறான். (விபூதி யோகம்-ஸ்லோகம் 8).

நான் அனைத்திற்கும் பிறப்பிடம். யாவும் என்னிடத்தே விரிகின்றன. இதையறியும் ஞானிகள் என்னை அன்புடன் தொழுகின்றனர்.

"நானே ஆத்மன்; மூலமும், முதற் பொருளாயும் விளங்குபவன் நானே. வேதங்களில் நான் ஸாமவேதம். மாதங்களில் மார்கழி நான். அக்ஷரங்களில் 'அகரம்' நான்" என்று இப்படி சர்வமும் தானே என்று அர்ஜுனனுக்கு எடுத்துக் காட்டுகின்றார்:

'இதைத்தான் பாரதியும்,'

வானில் பறக்கின்ற புள்ளெலாம்
நான்;
மண்ணில் திரியும் விலங்கெலாம்
நான்
கானிழல் வளரும் மரமெலாம் நான்
காற்றும் புனலும் கடலுமே நான்

என்று கூறிக் கொண்டே வந்து,

" அண்டங்கள் யாவையும் ஆக்கினோன்
நான்;
அவை பிழையாமே சுழற்றுவோன்
நான்
கண்டநற் சக்திக்களாமெலாம் நான்
காரண மாகிக் கதித்துளோன் நான்
நானெனும் பொய்யை நடத்துவோன்
நான்
ஞானச் சுடர்வானில் செல்லு
வோன் நான்

ஆன பொருள்கள் அனைத்திலும் ஒன்றாய்
அறிவாய் விளங்குமுதற் சோதி நான்''

என்று அந்த பரிபூரணமான இறைவனே சகலமும் என வலியுறுத்துகின்றார்.

मच्चित्ता मद्गतप्राणा बोधयन्तः परस्परम् ।
कथयन्तश्च मां नित्यं तुष्यन्ति च रमन्ति च॥

சித்தத்தை எவன் ஒருவன் என்பால் செலுத்தி உயிரை எனக்குரியதாக்கி, பரஸ்பரம் என்னை அறிந்து, தெளிந்து, என்னைப் புகழ்ந்து பேசி மன நிறைவுடன் பூசிக்கின்றானோ அவன் மகிழ்வுடன் வாழ்வான்.

வெறுங் கண்ணாடியில் உருவம் பதிவதில்லை. ரசம் பூசினால்தான் உருவம் தெரிகிறது. அதுபோல ஹிருதயத்தின்மீது பக்தி என்ற ரசத்தை பூசினால் ஈசுவர தரிசனம் கிடைக்கிறது என்று கூறுகிறார் பரமஹம்ஸர்.

அந்தக் கண்ணன்தான் 'ஸர்வ தர்மான் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ! அகம்த்வா சர்வபாபேப்யோ மோக்ஷ யிஷ்யாமி மா சுச:' என்று தன்னையே சரணடைந்தவர்களை இந்த உலக பந்தங்களிலிருந்து விடுவிக்கின்றேன் என்று உறுதி கூறுகிறான்.

இதைத்தான் அபிராமி பட்டரும் அபிராமி அந்தாதியில்,

'' ஆத்தாளை யெங்கள் அபிராமி வல்லியை அண்டமெல்லாம்
பூத்தாளை மாதுளம் பூநிறத்தாளைப் புவியடங்கக்
காத்தாளை அங்கையற் பாசாங் குசமுங்கருப்பு வில்லும்
சேர்த்தாளை முக்கண்ணி யைத்தொழு வார்க்கொரு தீங்கில்லையே.''

என்று உறுதி கூறுகின்றார்; ஆம், அந்த அன்னை அபிராமி வல்லியைப் பக்தியுடன் சரணடைந்தால் நம்மைக் காப்பது அவளது பாரமன்றோ.

திருவள்ளுவரும்,

'வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை இல'

என்பதைக் கடவுள் வாழ்த்து என்ற முதல் அதிகாரத்திலேயே தெளிவாக வலியுறுத்துகிறார்.

பாரதியும்,

'' நின்னைச் சரணடைந்தேன்-கண்ணம்மா
நின்னைச் சரணடைந்தேன்
பொன்னை உயர்வைப் புகழை விரும்பிடும்
என்னைக் கவலைகள் தின்னத் தகாதென்று (நின்னை)
. . . . . . . . . . . . . . . . . .
தன்செய லெண்ணித் தவிப்பது தீர்ந்திங்கு
நின்செயல் செய்து நிறைவு பெறும் வளம் (நின்னை)
நல்லது தீயது நாமறியோம் அன்னை
நல்லது நாட்டுக; தீமையை ஒட்டுக (நின்னை)

என்று அந்தக் கண்ணனை தனது குல தெய்வமாக, அன்னையாக நினைத்துப் போற்றுகின்றார்.

**தருமன் தோற்றது ஏன்?**

தருமன் சூதாடியபோது கண நேரம் கண்ணனை மறந்ததன் விளைவு சகுனியிடம் தோற்க நேரிட்டது; அதனால் ராஜ போகத்தை இழந்தான்; தாரத்தை இழந்தான்; தரும நெறி பிறழ்ந்து தடுமாறிப் போனான்.

**ஹிருதய கமல வாஸன் :**

பாண்டவர்களுடன் ஒரு முறை கண்ணன் தடாகத்தில் குளித்துக் கொண்டிருந்தபோது, அவனுடைய ஆடை நீரில் அடித்துச் செல்லப் பட்டது. அனைவரும் கரை சேர்ந்தும், ஆயர்பாடிக் கண்ணன் மட்டும் தடாகத்தின் மத்தியிலேயே இருந்தான். துரோபதை கண்ணனின் நிலையை அறிந்தாள். தன் சேலையின் முந்தானையைக் கிழித்து எறிந்தாள். அதை உடுத்திக் கொண்டு கண்ணன் கரை சேர்ந்தான்.

இந்த நன்றியை அவன் மறக்காமல், தன்மானம் காத்த பாஞ்சாலியை, துரியோதனன் சபையில், தவசிரேஷ்டர்கள், அறிஞர் பெருமக்கள், அண்ணன்மார்கள் யாரும், ஏதும் செய்ய முடியாத நிலையில், துச்சாதனன் அவளது சேலையை உருவி மானபங்கம் செய்ய முயன்றபோது, ''ஹிருதய கமல வாஸா'' என்று மனமுருகி தன்னைக் காத்தருள வேண்டியபோது, தன்னைச் சரணடைந்த அவளது மானத்தைக் காத்ததுடன், தனக்கு அவள் முன்னர் செய்த உதவியை, நன்றியுடன் திருப்பிச் செலுத்திய கண்ணனின் திருஉள்ளம்தான் என்னே!

**கருணையின் வாரிதி :**

குசேலரும், கண்ணனும் பால்ய சிநேகிதர்கள். பரம ஏழையான குசேலர் துவாரகையை நாடி, மாதவனைத் தரிசிக்க வருகின்றார். உடலிலே மானத்தை மறைக்க சிறு உடை; அதுவோ முற்றிலும் கந்தல். தலை எண்ணெய் மறந்து, புழுதி படிந்து செம்பட்டை பாய்ந்திருக்கிறது. சரியான அன்ன ஆகாரமின்றி, உடல் ஒட்டிப் போய் கண்கள் குழி விழுந்திருக்கின்றன.

கிருஷ்ணனே 'சரண்' என்று எண்ணி வந்த அந்த பாகவதோத்தமரின் வறுமையைப் போக்கியவன் அல்லவா அந்த யசோதை மைந்தன். ஒரு பிடி அவலைச் சாப்பிட்டதற்கே சகல ஐஸ்வர்யங்களையும் அருளினான் என்றால், அடுத்த பிடி அவலை சாப்பிட விடாமல் ருக்மிணி தடுத்து விட்டதற்குக் காரணம், குசேலரால் அந்த குபேர அந்தஸ்தை தாங்க முடியாது என்பதாலோ என்னவோ!

'மோக்ஷயிஷ்யாமி மாசுச:' என்றவாறு அவன் சொன்னபடி நடந்து காட்டிய பெம்மான்.

**நம்பினோர் கெடுவதில்லை:**

பாரதப் போரில் கண்ணன் தங்கள் பக்கம் இருந்தாலே போதும் என்று

வரம் கேட்டுப் பெற்றவன் அர்ஜுனன். ஆனால், துரியோதனனோ, கண்ணனின் கருணையை யாசிக்காமல், நம்பாமல், அவனது படைகளைக் கோரினான். விளைவு, தன்னையே முழுதும் நம்பிச் சரணடைந்த பாண்டவர்களை காத்தான் கண்ணன்; அறம் காத்து ஆட்சியை அவர்களுக்கு மீட்டுத் தந்தான். அவனை நம்பாமல் படை பலத்தை மட்டுமே நம்பிய துரியோதனன் அழிந்து பட்டான்.

**வேணுகான லோலன்:**

கண்ணனுக்கு முரளீதரன் என்ற ஒரு பெயர் உண்டு. முரளீ என்றால் வேய்ங்குழல் என்பது பொருளாகும். தனது புல்லாங்குழலை இசைத்து ஈரேழு பதினாறு லோகங்களையும் மெய்ம் மறக்கச் செய்யும் கான லோலன்.

இசைக் கருவிகளிலேயே 'வேணு' மிகவும் அருமையானது. அந்த 'வேய்ங்குழலை'-'வேணுவை' கணப் போதும் பிரியாமல் எப்போதும் கையில் வைத்துக் கொண்டிருக்கிறான் கண்ணன்.

அவன் வைத்திருக்கும் புல்லாங்குழல் மூங்கிலால் ஆனது. வாயில் வைத்து குரலிசைக்கும் துவாரம் தவிர, மேலும் 8 துவாரங்கள் இருக்கும். நமது ஐம்புலன்கள், மனம், அறிவு, ஆணவம் ஆகிய 8 அம்சங்களை அது குறிக்கிறது. அந்த நீலமேக ஸ்யாமளன் அண்ட சராசரங்களை எல்லாம் தனது சுநாதமான குழலிசையில் மெய்ம் மறக்கச் செய்கின்றான். நாமோ ஆணவம், காமம், பேராசை, வெறுப்பு, பொறாமை ஆகிய விவேக மற்ற ராகங்களை இசைத்து, அவன் தேவகானம் இசைக்க விடாமல் தடுத்து விடுகிறோம். குழலில் அபஸ்வரத்தை உண்டு பண்ணுகிறோம். அதனால் அவன் இந்த ''தீய புல்லாங்குழலை'' எறிந்துவிட்டு அல்லது முறித்துப் போட்டு விட்டு போக முயல்கிறான்.

அவன் கையில் உள்ள குழல்தான் நாம். அவனது விருப்பப்படி இசைக்க நாம் அவனை அனுமதித்தால், யாவும் அவன் சித்தப்படி நடக்கட்டும் என்று விட்டு விட்டால், அவன் தெய்வீகமான இசையை சுநாதமாக, இசைத்து நம்மை அந்தப் பேரானந்த இசையில் கரையச் செய்து, நமது மன அழுக்குகளைப் போக்கி, தூய்மையாக்க அவன் என்றுமே தயாராக இருக்கிறான்:

அந்த லீலா விநோதன் இசைக்கு நாம் கட்டுப்பட்டு இருப்போம். அவனையே சரண் அடைவோம்; நம்மை எல்லாம் காத்து சம்ரக்ஷிப்பது அவன் பொறுப்பு.



---

(12-ம் பக்கத் தொடர்ச்சி)

வண்புனல் தொழுநை வார்மணல் அகன்துறை
அண்டர் மகளிர் தண்தழை உடீஇயர்
மரம்செல மிதித்த மாஅல் போலம்

*(அகம் 59) (வரி 5-8)*

யமுனை ஆற்றங்கரையில் ஆயர் மகளிர் ஆடுகின்றனர். நீராட விரும்புகின்றனர். ஆடையைக் களைந்துக் கரையில் வைத்துவிட்டு நீராடுகின்றனர். நீராடிய பின்னர் கரைக்கு வந்து பார்க்கின்றனர். ஆடையைக் காணவில்லை. குருந்த மரத்தின்மீது கண்ணனைக் கண்டார்கள். அவனிடம் முறையிட்டார்கள். தனது மானத்தைக் காப்பாற்றும்படி வேண்டினார்கள் கண்ணன் குருந்த மரத்தை வளைத்து கிளைகளில் உள்ள தழைகளை ஆடையாக அணிந்து கொள்ள உதவுகிறான்.

ஆகவே கண்ணன் ஆயர்பாடியிலும் தாய்க் குலத்தின் மானத்தைத்தான் காப்பாற்றியுள்ளான். கரையில் வைக்கப்பட்டிருந்த ஆடைகள் காற்றாலோ அல்லது வேறு காரணங்களால் காணாமல் போயிருக்கலாம். ஆடையின்றி இருந்த பெண்களின் அவல நிலையைப் போக்கியவன் கண்ணன். ஆயர்குல மங்கையரின் மானம் காத்தவன் கண்ணன் என்பது உறுதியாகிறது. கண்ணனால் ஆயர் மகளிரின் மானம் எந்த விதத்திலும் பங்கப்படுத்தப்படவில்லை என்பது தெளிவாகிறது.



# திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

# நன்கொடை திட்டத்தின் கீழ் குடில்கள்

திருமலையில் யாத்திரிகர்களின் வசதியை மனதிற்கொண்டு, அங்கு மேலும் பல தங்கு வசதிகளை அமைத்துத்தர தி. தி. தேவஸ்தானம் முழு முயற்சியை மேற்கொண்டுள்ளது. இவ்வகையில், பக்தர்கள் மற்றும் பரந்தமனப்பான்மை கொண்ட யாத்திரிகர்களின் கூட்டு முயற்சியுடன் தன் நன்கொடை திட்டத்தின் கீழ் மேலாண்மை இம்முயற்சியில் இறங்கியுள்ளது.

யாத்திரிகர்களின் பயன் கருதி, பல்வேறு திட்டங்களின் விவரங்கள் கீழ்வருமாறு கொடுக்கப் பட்டுள்ளன.

## கருடாத்ரி நகர் குடில்கள் திட்டம்

இத்திட்டத்தின்கீழ் கட்டடத்தின் அடித்தளத்திலும், முதல் தளத்திலும் ஒவ்வொன்றும் 4 அறைத்தொகுதிகள் கொண்ட 16 குடில்கள் கட்டப்படும். ஒவ்வொரு அறைத்தொகுதியிலும் குளியலறை மற்றும் பொதுத் தாழ்வாரம் உள்ளடங்கிய 10 X 12 அடி என்ற அளவு கொண்ட அறை இருக்கும். 320 அடி சதுர அளவு கட்டட அறைகொண்ட ஒவ்வொரு அறைத்தொகுதிக்கான நன்கொடை ரூ. 30,000 மட்டுமே ஆகும்.

128 அறைத்தொகுதிகளில் 66 அறைத்தொகுதிகளுக்கான நன்கொடை ஏற்கெனவே பக்தர்கள் அளித்து விட்டார்கள்

8 அறைத்தொகுதிகளின் ஒரு தனிக்குடிலுக்கு ரூ. 2.4 இலட்சம் அல்லது 4 அறைத்தொகுதிகளுக்கு ரூ. 1.2 இலட்சம் அல்லது இரண்டு அறைத் தொகுதிகளுக்கு ரூ. 60,000/- என்ற வகையில் நன்கொடை அளிக்கலாம்.

## ராம் பகீச்சா விருந்தினர் விடுதிகள் திட்டம்

கோயிலின் வடகிழக்கு திசையில் ராம் பகீச்சாவில் மூன்று விருந்தினர் விடுதிகள் கட்டுவதென்று முடிவுசெய்யப்பட்டுள்ளது. ஒவ்வொரு விருந்தினர் விடுதியும் ஒவ்வொன்றும் 50 அறைத் தொகுதிகள் கொண்ட மூன்று தளங்களைக் கொண்டு விளங்கும். குளியலறை வசதியுடன் கூடிய 14 X 16 அடி அளவு கொண்ட அறைகளை ஒவ்வொரு அறைத்தொகுதியும் கொண்டு விளங்கும். 600 சதுர அடி கொண்ட இவை பொது தாழ்வாரம் ஒன்றினைக்கொண்டு விளங்கும். ஒவ்வொரு அறைத்தொகுக்கான நன்கொடை ரூ. 60,000/-ஆகும். மொத்தம் 450 அறைத்தொகுதிகளில், 37 அறைத்தொகுதிகளுக்கான நன்கொடை ஏற்கெனவே வழங்கப்பட்டுள்ளன

## பயன்கள்

1. கட்டடத்தில், நன்கொடையாளர்களின் பெயர் பொறிக்கப்பட்டுள்ள கருங்கற் பலகை வைக்கப்படும்.

2. நன்கொடையாளர்கள் வருடத்தில் (ஜனவரி முதல் டிசம்பர் வரை) நன்கொடை அளிக்கப் பட்டுள்ள குடில்களில் ஒரு தடவை தங்கும்போது 10 நாட்களுக்கு மிகாமல், 60 நாட்களுக்கு இலவசமாகத் தங்கலாம்.

3. குடில்கள் ஒதுக்கப்படும்போது, நன்கொடையாளர்களின் உறவினர்களுக்கு முதலிடம் கொடுக்கப்படும்.

4. நன்கொடையாளர்கள் கேட்கும்போது, அவர்கள் பெயரில் உள்ள குடில்கள் காலியாக இல்லாவிடில், அவர்களுக்கு வேறு தங்கு வசதிகள் செய்து தரப்படும்.

·ம் பக்கத் தொடர்ச்சி

பொருளாகும். மலரணத் தொடங்கி, ாநீநூறே எனப் பாடலை முடித்திருப் து நகைச்சுவையைத் தருகின்றது.

கம்பன் என்ற ஒரு புலவர் நாரா ணன் என்று எழுதுவதற்குப் பதி ாக நாராயணன் என்று எழுதிவிட் .ாராம். பிழை செய்ததையறிந்த ான மேகத்திற்குக் கோபம் வந்து ிட்டது; உடனே சிரிப்பூட்டும் ஒரு வண்பாவைப் பாடி எழுத்துப்பிழை செய்தவரைக் கண்டித்தாராம். அப் ாடலாவது!

நாரா யணனை நராயணனென்
றேகம்பன்
ஓராமற் சொன்ன வுறுதியால்—நேராக
வாரென்றால் வரென்பேன்
வாளென்றால் வள்ளென்பேன்
நாரென்று னரென்பேன் நான்.

இப்பாடற் பொருளாவது: நாரா ணன் என்று இருக்க வேண்டிய பெயரை நராயணன் எனக்குறுக்கித் தெளிவின்றிச் செய்த பிழையுள்ளதே தை யாராலும் மன்னிக்க முடி ாது. அவ்வாறின்றி யாராவது ன்னிக்கத் தயாரென்றால் நானும் தற்கு நேருக வார் என்பதற்குப் திலாக "வர்" என்பேன். வாள் ன்பதற்குப் பதிலாக வள் என்று சொல்லுவேன். நார் என்று சொல் தற்குப் பதிலாக நர் என்று கூறு வன் என்று கவிகாளமேகம் பாடி ர். புலவரொருவர் அறியாமல் செய்த எழுத்துப் பிழைக்காக சிரிப் ட்டும் இப்பாடலைப் பாடி பலரைச் ிரிப்பிலாழ்த்தினராம் காளமேகப் லவர்.

சேக்கிழாரால் பாடப்பட்ட பெரிய ராணத்தில் வரும் அறுபத்து மூன்று ாயன்மார்களில் ஒருவர் சிறுத் தொண்ட நாயனர் என்பவர். இவரது க்தியின் மேன்மையை உலகறியச் செய்ய எண்ணினர் சிவபெருமான் எனவே ஒரு சிவனடியார் வேடம் ண்டு சிறுத்தொண்டரிடம் சென்று தனக்குப் பிள்ளைக் கறி வேண்டு கேட்டார். சிவனடியார் வேண்டிய வற்றைக் குறைவின்றி வழங்கும் சிறுத் தொண்டரும் தன் ஒரே மகனை வெட்டிக் கறி சமைத்து சிவனடி யாருக்கு உண்பதற்குப் பரிமாறினர். சட்டியிலே பாதி பிள்ளைக்கறியும், அகப்பையிலே சிறிது கறியும், சிவ னடியாருக்குப் போட்டிருந்த இலை யில் சிறிது கறியும் இருந்தது. சிறுத் தொண்டரின் பக்தியின் மேன்மையை உணர்ந்த சிவபெருமான் 'எங்கேஉன் பிள்ளையைக் கூப்பிடு' என்று கூற, சிறுத்தொண்டர் தன் மகனை அழைக்க அம்மகனும் உயிரோடு ஓடி வந்தானும்; அவ்வாறு அம்மகன் ஓடி வந்தது எவ்வாறு எனச் சிவ பெருமானையே கேட்கிருர் காள மேகப் புலவர். இதோ அந்தப் பாடல்:—

சட்டியிலே பாதியந்தச் சட்டுவத்தி
லேபாதி
இட்டகலத் திற்பாதி யிட்டிருக்கத்—
திட்டமுடன்
ஆடிவந்த சோணேச ரன்றழைத்த
போதுபிள்ளை
ஓடிவந்த தெவ்வா றுரை?

இப்பாடல் நகைச்சுவையுடனும், இறைவனை நோக்கி கறியாக்கிவிட்ட பிள்ளை உயிருடன் பிழைத்து வந்த தெவ்வாறு? என்பதில் அவ்விறை வனின் சிறப்பையும் காளமேகப் புல வர் புலப்படுத்துகிருர்;

ஒரு சமயம் காளமேகம் வைத்தீஸ் வரன் கோயில் கொண்டுள்ள திருத் தலத்திற்குச் சென்று அங்குக் கோயில் கொண்டுள்ள சிவபெரு மானை வணங்கினர். பின் அவ்விறை வனைப் பார்த்து பின் வரும் வினவைப் பாடல் வடிவில் பாடிக்கேட்டார். அப்பாடலாவது!—

தீத்தானுன் கண்ணிலே, தீத்தானுன்
கையிலே
தீத்தானும் உன்றன் சிரிப்பிலே—
தீத்தானுன்
மெய்யெலாம் புள்ளூருக்கும் வேளூரா
உன்னையிந்தத்
தையலா ளெப்படிச் சேர்ந்தாள்?

சடாயு என்னும் பறவை வணங்கிய இப்புண்ணியம் மிகுந்த வைத்தீஸ் வரனே உன் நெற்றிக் கண்ணிலே தீ, திருக்கரத்திலே நெருப்பு, திரி புரத்தை எரித்த உன் புன்னகை யிலும் தீ. உன்னுடைய உடல் முழு மையும் ஒரே தீ. அப்படியிருக்க இந்தத் தையலாள் (உமையம்மை) உன் இடப்பாகத்திலே எவ்வாறு இடம் பெற்றிருக்க விரும்பினள்? என்று காளமேகம் சிவபெருமானைக் கேட்கிருர். சிவபெருமான் செந் நிறமுடையவர். தீ மயமான அவ ரிடம் உமாதேவி சேர்ந்திருப்பது எப்படி? எனக்கேட்டு சிவபெரு மானின் பெருமையை நகைச்சுவை யோடு வெளிப்படுத்துகிருர் கவி காளமேகம்;

முடிவுரை:

இவ்வாருகக் கவி காளமேகம் என் னும் புலவர் பாடிய பாடல்கள் அனே கம் உள; அவற்றில் பக்திப் பாடல் களில் நகைச்சுவையைத் தரும் சில பாடல்களை மட்டும் கண்டோம். மேலும் இவரது சிலேடைப் பாடல் களும் பல உள்ளன. அவற்றில் பாம்புக்கும் எள்ளுக்கும் சிலேடை, வைக்கோல் போருக்கும் யானைக்கும் சிலேடை, தேங்காய்க்கும் சிவனுக் கும் சிலேடை போன்ற பல பாடல் கள் படிக்கப் படிக்கச் சுவை யானவை. இப்பாடல்களைப் பாடப் பகுதியிலும் சேர்த்துள்ளனர். பக்தி யில் நகைச்சுவை தரும் காளமேகப் புலவரின் திறமை பாராட்டுக்குரிய தாகும்.



# நாக வழிபாடு

திரு. கே. இராமநாதன், பி.ஏ.,
சேலம்.

இறை வழிபாடு என்பது உலகின் அனைத்து மதங்களுக்கும் உயிர்நாடியாக விளங்கி வருகின்றது. நமது இந்து மதமும் இதற்கு விதிவிலக்கல்ல; இறை வழிபாடு, சடங்கு முதலியவற்றால் கட்டப்பெற்ற ஒரு தெய்வீகக் கலைக்கூடமாய் நமது இந்து மதம் திகழ்கின்றது. 'நம்பிக்கையுடன் இறைவனைத் தொழுதால் நம் உள்ளத்து ஆசைகள் நிச்சயம் நிறைவேறும்' எனும் ஆழ்ந்த கருத்தை உரைப்பது நமது மதம். இந்து மதத்தின் இறை வழிபாட்டில் தெய்வங்களுக்குக் குறைவில்லை. இறைவழிபாடு என்பது இன்னல் தீர்க்கும் நன் மருந்து என நம் முன்னோர்கள் நம்பினர். அவர்களின் அத்தகு நம்பிக்கையின் விளைவால் உதித்த வழிபாட்டு முறைகளில் ஒன்றே நாக வழிபாடு.

'பாம்பென்றால் படையும் நடுங்கும்' என்பார்களே, அவ்வளவு கொடுமையான பாம்பினை எவ்வாறு தெய்வமாய்க் கொள்ள முடியும் என அறியாமையில் உள்ளோர் வினவலாம். பாம்பினைத் தெய்வமாய் எண்ணி வழிபடுதலால் ஏற்படும் நன்மைகளை அறிந்து கொண்டால் அவர்களது இச்சந்தேகம் நீங்கி விடும். மனிதனின் பசியைப்போக்க வல்ல உணவினை ஆக்கப் பயன்படுவது நெருப்பு. அதே சமயத்தில் ஊரையும் அழிக்கும் வலிமை உடையது. கவனத்துடன் உபயோகித்தால் அது நமக்கு நன்மை தரும். அதே போல நாகத்தை நாம் பணிவுடன் வணங்கி வேண்டி நின்றால் நமது வேண்டுதல் நிறைவேறும்.

உலகின் அனைத்து நாடுகளிலும் நாகம் வாழ்கின்றது. நெடுங்காலம் தொட்டு உலகில் வாழ்ந்து வரும் பிராணிகளில் இதுவும் ஒன்று. சூரியனை மையமாகக் கொண்டு இயற்கையை வணங்கி வந்த மக்கள் நாகத்தையும் வணங்கினர். இந்தியாவில் நெடுங்காலம் தொட்டே நாக வழிபாடு நடைபெற்று வந்ததற்கான தகுந்த ஆதாரங்கள் கிடைத்துள்ளன. நாகரிகத்தின் தொட்டில் என அழைக்கப்படும் சிந்துவெளி நாகரிகக் காலத்தில் வாழ்ந்து வந்த மக்கள் நாக வழிபாடு நடத்தி வந்தனர். அவர்கள் பயன்படுத்தி வந்த முத்திரைகளில் நாகச் சின்னங்கள் பொறிக்கப்பட்டுள்ளன. பௌத்த மதத்திலும், அதன் இலக்கியங்களிலும் நாக வழிபாட்டின் மேன்மைகள் உரைக்கப்பட்டுள்ளன. நாக வழிபாடு பல இலக்கியங்களில் குறிப்பிடப்பட்டிருப்பதோடல்லாமல் சிற்பங்களாகவும் வடிக்கப்பட்டுள்ளன.

நாக வழிபாட்டின் மேன்மையை உணர்ந்த மக்கள் தாம் வணங்கும் தெய்வத்துடன் இணைத்து வணங்கலாயினர். இந்து மதத்தின் மூத்த முத்தேவர்களுடன் நாகம் கொண்டிருக்கும் தொடர்பை நாம் இப்போது அறியலாம். தேவர்களின் தலைவனும், உலகத்து உயிர்களையெல்லாம் காத்து வருபவனுமான திருமால் பாற்கடலில் பள்ளி கொண்டிருப்பது பாம்பணையின் மீதே அன்றோ! ஆதிசேடன் எனும் பெயர் கொண்ட அந்த நாகமே உலகத்தின் பாரத்தைச் சுமப்பதாக நம்பிக்கை உள்ளது. அது மட்டுமல்லாது திருமால் இராவணனை அழிக்க இராமனாக இப்பூவுலகில் அவதரித்த போது அவரது ஆருயிர் இளவல் இலட்சுமணனாக அவதரித்ததும் இந்நாகமேயாம்.

திருச்சிற்றம்பலத்தில் நடனமாடுபவனும், நாகாபரணன் எனும் பெயரினைக் கொண்டவனுமான சிவன் தனது உடலில் அணிகலனாக அணிவது நாகங்களையே! உலகத்து உயிர்களை தோற்றுவிப்பவனான பிரம்மனோடு நாகத்தின் தொடர்பு குறிப்பிடத்தக்க ஒன்றாகும். ஆம்! பிரம்மாவின் மகனான காசிபனுக்கும் அவனது மனைவியான கத்ருவுக்கும் இடையே பிறந்த குழந்தையே நாகம் என்று புராணம் குறிப்பிடுகிறது. இந்திரபுரியில் கடும் விடத்தைக் கொண்டு விளங்கும் நாகம் பிறந்ததைக் கண்டு அஞ்சிய பிரமன் அவைகள் வளர்வதற்கென தனியே ஓர் உலகினை அமைத்துக் கொடுத்தார். அதுவே 'நாக லோகம்' எனப்பட்டது.

தேவர்கள் பாற்கடலைக் கடைய யத்தனித்தபோது அவர்களின் முயற்சிக்கு முழுவடிவம் கொடுக்கத் துணிந்ததும் ஒரு நாகமே. ஆம்! தேவர்கள் அந்த நாகத்தையே கயிறாகக் கொண்டு பாற்கடலைக்கடைந்து அமுதம் கண்டனர். கிருஷ்ணன் காளிங்கன் எனும் நாகத்தின் மமதையை அடக்கப் புரிந்த காளிங்க நர்த்தனம் அனைவரும் அறிந்ததே. முழு முதற்கடவுளான விநாயகரின் இடுப்பில் உதிர பந்தனமாக நாகம் விளங்குகின்றது. பலராமன் சேச நாகத்தின் அவதாரம் என்பர். இவ்வாறு நாகத்தைத் தாம் வணங்கும் தெய்வங்களோடு இணைத்து வணங்கி மகிழ்ந்த நம் முன்னோர்கள் நாக வழிபாட்டை சிறப்புற நடத்த வேண்டுமென எண்ணி அதற்கென தனி நாள் ஒன்றையும் குறித்தனர்.

நாக வழிபாடு நடத்தச் சிறந்த நாள் நாக பஞ்சமியாகும். இது ஆவணி மாதத்தின் பூர்வ பக்கத்து ஐந்தாம் திதியன்று கொண்டாடப்படுகின்றது. இந்நன்னாளில் நாம்

நாகத்தை வழிபடுவோமேயானுல் நமது தீமைகள் விலகி நன்மைகள் சேரும் எனும் நம்பிக்கை உள்ளது. 'நாகபஞ்சமி' தோன்றியதற்கு கதை ஒன்று வழக்கில் உள்ளது. ஒருமுறை விவசாயி ஒருவன் தனது நிலத்தைக் கலப்பை கொண்டு ஆழ உழுது கொண்டிருந்தான். அப்போது அவனது கலப்பையின் நுனி அங்கு அருகிலிருந்த ஒரு நாகப்புற்றில் இறங்கியது. அதனுல் அப்புற்றில் இருந்த நாகக்குட்டிகள் இறந்தன. இரைதேட வெளியே சென்றிருந்த தாய் நாகம் புற்றுக்குத் திரும்பியது. புற்று சிதைக்கப்பட்டுத் தனது குட்டிகள் இறந்து கிடப்பதைக் கண்டு பெருந்துயருற்ற நாகம் தனது இனம் அழிக்கப்பட்டதை எண்ணி கடுஞ்சினம் கொண்டது.

தனது இனத்தை அழித்தவன் விவசாயியே என அறிந்த அது அவனையும், அவனது குடும்பத்தையும் அடியோடு அழித்து பழி தீர்த்துக் கொள்வது என்று முடிவு செய்தது. அவ்வாறே அவனது வீட்டிற்குச் சென்ற நாகம் அவனையும், அவனது மனைவியையும் கொத்திக்கொன்றது; பின்பு அவனது ஒரே மகளையும் கொல்ல விழைந்தது; அவளோ திருமணமாகி அருகில் ஒரு கிராமத்தில் வசிப்பவள். அதை அறிந்த நாகம் ஒரு நாள் அவளைக் கொல்லும் நோக்கத்தோடு அவளது வீட்டை அடைந்தது.

ஆனுல் அங்கோ அப்பெண், நாகத்தைத் தெய்வமாக எண்ணி நாளும் பூஜித்து வருவதைக் கண்டது. காலையில் எழுந்து நீராடி நாகத்தை வணங்கிய பின்பே பிற பணிகளைச் செய்வதைக் கண்ட நாகத்தின் சீற்றம் தணிந்தது. அவளது பக்தியைக் கண்டு அகமகிழ்ந்து அவள் முன் தோன்றி வேண்டும் வரத்தைத் தருவதாய்க் கூறியது. அவளோ, இறந்த தன் தாய், தந்தையை உயிர்ப்பித்துத் தரவேண்டினுள்; அவளது வேண்டுதலை ஏற்ற நாகம் அவ்வாறே செய்தது. அவ்வாறு அவளுக்கு வரமளித்த அந்த நல்ல நாளே நாகபஞ்சமி என்று இன்றளவும் சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகிறது.

நாகபஞ்சமி நாளன்று தமிழகத்திலும், பிற இந்திய மாநிலங்களிலும் வழிபாடுகள் சிறப்புடன் நடத்தப்படுகின்றன. காஷ்மீரிலும், அதன் சுற்றுப்புறங்களிலும் நாகத்திற்கெனத் தனிக்கோவில் உள்ளன. அக்கோவிலின் மூல விக்கிரகங்களில் பாதி உருவம் மனித உருவிலும், பாதி உருவம் நாக வடிவிலும் இருப்பது போல் வடிக்கப்பட்டுள்ளன. தமிழகத்தில் நாகச் சிலைகள் அரச மரத்தின் அடியில் வைக்கப்பட்டுப் பூசிக்கப்படுகின்றன; இவ்வழிபாடு செல்வம், பிள்ளைப்பேறு போன்ற தேவைகளை நிறைவேற்றும் பொருட்டு நடத்தப்படுகின்றது.

பிள்ளைப்பேறு இல்லாதவர்கள் நாகவழிபாடு நடத்தினுல் குழந்தை பிறக்கும் எனும் நம்பிக்கை பரவலாக உள்ளது. அதற்கான வழிபாட்டு முறையும் சொல்லப்படுகின்றது. கருங்கல் ஒன்றில் ஒரு படம் இரு படமுள்ள பாம்புகளை வடித்து அதைப் புனித நீரில் நீராட்டி தூய்மை செய்து, தம்பதிகள் இரவு முழுவதும் உபவாசமிருக்க வேண்டும். மறுநாள் அச்சிலைக்குப் பூசை செய்வித்து அரச மரம் ஒன்றின் கீழ் ஸ்தாபித்து அன்னதானம் செய்து வழிபடின் பிள்ளைப் பேறு கிட்டும்.

இன்றைய விஞ்ஞான உலகில் நாகத்தினுல் உண்டாகும் நன்மை குறிப்பிடத்தக்க ஒன்ருகும்; நாகத்தின் விடம் கடுமையான நோயினை நீக்கவல்ல மருந்துகள் தயாரிக்கப் பெருதவியாக மருத்துவத் துறையில் பயன்படுகிறது. பாம்பின் தோல் விலைமதிப்பு மிக்கது. இசையில் நாக வரளி எனும் இராகம் உள்ளது. நாகசுரம் எனும் இசைக்கருவியும் நாகத்தின் பெயரால் அமைந்ததே. நாக உருவம் பதிக்கப் பெற்ற மோதிரங்களையோ, பிறஅணிகலன்களையோ அணிந்தால் நன்மைகள் சேரும் என சோதிட வல்லுநர்கள் கூறுகின்றனர்.

இவ்வளவு சிறப்பினைக் கொண்டு விளங்கும் நாகம் இசைக்கு மயங்க வல்லது. நாகத்தை நாம் நாளும் தொழுது வருவோமேயாயின் அது நமக்கு நன்மையைச் சேர்க்கும் என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை.





திருச்சூர் பூரம் - திருவம்பாடி கோயில் (கேரளா) சுவாமி புறப்பாடு
திரு. எஸ். ஜி. சேஷகிரி-கோவை

28-ம் பக்கத் தொடர்ச்சி

தருளித் திரும்பியவுடன் கோயில் திருவாய்மொழி சாத்துமுறை நடக்கிறது: கூரத்தாழ்வான் சாத்துமுறைக்குக் கோவிந்தராஜன் எழுந்தருளுகிறார். திருவீதிப் புறப்பாடு இல்லை. அத்யயனோத்ஸவமாதலால் உபதேசரத்தின மாலையும் திருவாய்மொழி நூற்றந்தாதியும்தான்; இவ்விருவர்க்கும் ஒரே ஒருநாள் தான் உத்ஸவம்.

புண்டரீகவல்லித் தாயாருக்குப் பங்குனியுத்தரம் முடிய ஏழு நாளுத்ஸவம். ஆண்டாள் வெளிப்பெரியாழ்வார் கலியன் அனந்தாழ்வானுடன் கூடிய மதுரகவிகள் திருமலை நம்பி வேதாந்தாசார்யர் இவர்களுக்குப் பத்துநாளுத்ஸவம்; சாத்துமுறை நாட்களில் காலையிலேயே இவர்கள் ஸந்நிதிக்குக் கோவிந்தராஜன் எழுந்தருளித் திருமஞ்சனம் திருப்பாவை சாத்துமுறை மாலையில் புறப்பாடு, இரவில் திருவாய்மொழி சாத்துமுறை எல்லாம் நடைபெறுகிறது. இவர்களெல்லார்க்கும் திருவாய்மொழியும் யதோசிதம் ஸ்வப்ரபந்தமும் ஸேவிக்கப்படும். வேதாந்த தேசிகருக்கு நாலாயிர ஸேவை நடக்கிறது. புண்டரீகவல்லித் தாயார் ஆண்டாள் தவிர்ந்த மற்றவர்க்குக் கோவிந்தராஜன் மூலவரிடம், திருவாய்மொழி சாத்துமுறையான பிறகு மங்களாசாஸனம் நடைபெறுகிறது. வேதாந்த தேசிகருக்கு மங்களாசாஸனம் இப்போது நடப்பதில்லை.

எம்பெருமானாருக்கும் மணவாள மாமுனிகளுக்கும் பத்துநாளுத்ஸவம்; சாத்துமுறையன்று இவர்கள் ஸந்நிதிக்குக் கோவிந்தராஜன் மாலையில் எழுந்தருளி, இவர்களுடன் தினசர்யை எதிராஜ விம்சதி ஆளவந்தார் ஸ்தோத்ர கோஷ்டியுடன் திருவீதி எழுந்தருளி இவர்கள் ஸந்நிதி சேர்ந்தவுடன் அமுது செய்து திருவாய்மொழி சாத்துமுறை கண்டருளுகிறார். எம்பெருமானாருத்ஸவத்தில் எம்பெருமானார்க்குப் பத்து நாளும் இரண்டு வேளையும் புறப்பாடும் நாலாயிரமும், ஸந்நிதி சேர்ந்தவுடன் இயற்சாத்தும் இயற்படியும் உண்டு. மணவாளமாமுனிகளுக்கு நாலாயிர ஸேவையும், சாத்துமுறையன்று இரவு மட்டும் கோவிந்தராஜனோடு புறப்பாடும் நடைபெறுகிறது. எம்பெருமானாருக்குச் சாத்துமுறையன்று காலையிலும் மாலையிலும் கோவிந்தராஜனுடைய விமான ப்ரதக்ஷிணத்தில் தாடீபஞ்சக யதிராஜவிம்சதி கோஷ்டி நடைபெறுகிறது; மணவாளமாமுனிகளுக்குச் சாத்துமுறையன்று திருப்பாவை திருவாய்மொழி சாத்துமுறைகள் முடிந்தவுடன், இரண்டு வேளைகளிலும் திருசர்யை யதிராஜவிம்சதியநுஸந்தானம் நடக்கிறது. வேதந்த தேசிகர்க்குச் சாத்துமுறையன்று (ஐப்பசித் திருவோணம்) வடகலையார்களின் தேசிகஸ்தோத்ராநுஸந்தானம் புறப்பாட்டிலும் உள்ளேயும் உண்டு;

ஸ்ரீஜயந்தியன்று கண்ணனுக்குப் பெரியாழ்வார் திருமொழியும் ஸ்ரீராமநவமியன்று கோவிந்தன் ஸந்நிதியிராமபிரானுக்கும் தனிக்கோயில் சக்ரவர்த்தி திருமகனுக்கும் பெருமாள் திருமொழியும் ஸேவிக்கப்படும்.

பேரிசெட்டியாரின் ஆதீனத்திலிருக்கும் திருக்கச்சிநம்பி ஸந்நிதியில் அவருக்குப் பத்து நாளுஸத்வமும் திருவாய்மொழி ஸேவையும், சாத்துமுறையன்று அதே ஸந்நிதியில் எழுந்தருளியிருக்கிற தேவப்பெருமாளுடன் புறப்பாடும் நடைபெறுகிறது.

திருமலையிலும் திருப்பதியிலும் திருச்சானூரிலும் உள்ள எல்லா ஸந்நிதிகளிலும், ஸாதித்தருள ஸ்ரீசைலேச தயாபாத்ரம் என்று தொடங்கி அத்யாபகர்களைக் கொண்டு ஸேவையை நடப்பிக்கும் அத்யாபகத் தலைமை ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதிவிசிஷ்டரான பெரிய ஜீயர் ஸ்வாமியின் தனிப்பட்டதோர் செல்வமாகும். அவரில்லாதபோது ஸ்ரீமத்பரமஹம்ஸ சிறிய ஜீயர் ஸ்வாமியோ, அவருமில்லாத ஸமயத்தில் ஏகாங்கி ஸ்ரீவைஷ்ணவரோ அப்பணியைப் பெரிய ஜீயர் ஸ்வாமிக்குப் ப்ரதிநிதியாகச் செய்தருளுவர்கள். இந்தப் பொறுப்பைத் தேசிகர் ஸந்நிதியிலும் வடகலையேகாங்கி ஸ்ரீவைஷ்ணவர் மூலமாகப் பெரிய ஜீயர் நிர்வஹித்தருள்வர். தேசிகர் ஸந்நிதியில் ஸ்ரீசைலேச தயாபாத்ரத்திற்குப் பதிலாக ராமாநுஜதயாபாத்ரத்தை வடகலையேகாங்கி தொடங்குவர்.

(தொடரும்)



திருமலை நாயக்கர் மஹால்-மதுரை.
திரு. வி. முத்துராமன்-கோவை.

# கோயில் வளர ...

ஆதிமுதல் நாயகனே ஆதாரமான
வனே
அருகம்புல்லுக்கும் ஆதரவு தந்
தோனே-ஓம் எனும்
பிரணவத்தை உடலாய் கொண்டு
என்றும்
பாபங்கள் தீர்ப்போனே சரணம்.

கோயில்கள் நிறைந்தது நம்நாடு. "பள்ளித் தலமனைத்தும் கோயில் செய்குவோம், எங்கள் பாரத தேசமென்று தோள் கொட்டுவோம்", என்று முழங்கிய பாரதியைப் பார்த்து பள்ளிகளைக் கோயில் ஆக்குவதா என ஆச்சரியப்படுவோர் அதிகமுண்டு. "இவ்வரிகள் இடைச் செறுகலோ" என எண்ணுவோரும் உண்டு. பாரதி ஓர் தீர்க்கதரிசி - தத்துவ ஞானி. பாரத தேசம் பாரினில் சிறந்தோங்க வேண்டுமென்று கனவு கண்டவன் பாவேந்தன் பாரதி. இந்தியா முழுதும் சென்றதால், எண்ணரும் கோயில் கண்டதால், கோயில் அமைந்த - வளர்ந்த - பயன் தந்த முறைகள் யாவும் பலரும் உய்த்துணர வேண்டுமென்ற [உணர்வு உந்தப்பட்டே, "பள்ளித் தலமனைத்தும் கோயில் செய்குவோம்" என்று தெளிந்து பாடினான்.

கோயில் என்பது இறைவன் உறையும் வீடு. "கோ" என்பதற்குத் தலைவன் என்ற பொருளும் உண்டு. இறைவன் அகிலத்திற்கும் தலைவன்; நாட்டின் பொறுப்பினை ஏற்று நடத்துபவன் தலைவன். அரசன் என்றும் மன்னன் என்றும் அழைக்கப்பட்டவன். அதுபோல் குடும்பத்தை நிர்வகிப்பவன் குடும்பத் தலைவன் அல்லவா? இல்லத் தலைவனோ, தலைவியோ, நாட்டின் தலைவனோ, தலைவியோ தன் மக்கள் சிறப்புற வாழ விரும்புவது இயற்கையன்றோ? எனவே, அகிலத்தின் தலைவனை அன்றாடம் வணங்கி அருளாசி பெற, அந்த அருவாய், உருவாய், அருவுருவாய் அமைந்தவனை அகிலத்தை அளித்து ஆட்டிப் படைப்பவனை, தன்னைப் படைத்தவனை, தன்னைப் போல் உருவமாக்கி, தன் வயப்படுத்தி தன் மனத்துள் நிலை நிறுத்தி, கண்ணால் அவனைக் கண் குளிரக் கண்டு ஆனந்தக் கண்ணீர் மல்க அருளாசிபெற அமைத்தான் உருவத்தை. அவ்வுரு அமைவுற்ற இடம், தனக்கிருக்கும் இல்லம் போல் அமைக்க நினைத்தான். சாதாரண மானுடன் இல்லத்திற்கும், அகிலாண்டேசுவரன் இல்லத்திற்கும் அமைப்பில் மாறுபாடு இருக்க வேண்டிய அவசியத்தை உணர்ந்தான். கலையும், கல்வியும், எறும்பு முதல் எல்லா ஜீவராசிகளும், தாவரமும் அவன் படைப்பு. படைக்கப்பட்ட உயிர்கள் யாவும், தன் எண்ணம் போல் இறைவனை எண்ணாதா? அத்தனைக்கும் இடமளிக்கும் வண்ணம், உத்தம எண்ணம் கொண்டு உண்டாக்கிய கோயில் அல்லவா?

கோயில் என எண்ணும்போது எதிரில் தெரிவது கோபுரம். கோபுரத்தை முன்னே தரிசித்துப் பின்தானே உள்ளே இறைவனை தரிசிக்க முடிகிறது. அன்றாடம் இல்லத்தில் ஏற்படும் எத்தனையோ பிரச்சினைகள். அதனால் கோயிலுக்குள் சென்று இறைவனைத் தொழ நேரமின்றி இருப்போரும், கோபுரத்தைக் கண்டதும் கோயில் கொண்ட இறைவனைக் கண்டது போன்ற ஆனந்தம், அமைதி, தன்னம்பிக்கை கொள்ள ஏற்படுத்தியது என்றால் ஏது மாற்றம்?

வான்முட்டும் கோபுரம்—அதில் வடித்தெடுத்த சிற்பம் வாழ்க்கைத் தத்துவத்தைக் காட்டும் கலைக்கூடம். முனிவர்கள் தவக்கோலம், பலரும் பக்தி செய்யும் திருக்கோலம், தேவமாதர் நடமிடும் அழகு, இசைக் கருவிகள் இசைப்போர், காவல் புரிவோர், என எண்ண முடியா வண்ணக் கோலங்கள்; அத்தனை பெரிய கோபுரமும், அறிவு பூர்வக் கலைகளும் அவரவர் அறிந்த திறமைக்குச் சான்று. கண்ணே போல் போற்றிப் பின் வரும் தலை முறைக்கும் தங்கள் கலைபோல் மேலும் கலை சிறக்க கல்வி முறை கற்றுத் தரும் பள்ளி. வண்ணம் வடித்திட்ட பாங்கு, பொறியியல் கற்றிட, கட்டிடக் கலையறிய கலவைப் பொருள் சேர்க்கும் முறை தெரிய, கல்வெட்டுக்கள்—அத்தனையும் கற்பிக்கும் கலைப்பள்ளி; பறவைகள் உறைய வாய்ப்பான இல்லம்; கோபுர தரிசனம் முடிந்தது. உள்ளே நுழைகின்றோம். பெரிய, பிரம்மாண்டமான சுற்றுப் பிரகாரம் காண்கிறோம். அதைச் சுற்றி வரும்போது ஆங்கு வளர்க்கப்பட்டுள்ள பல்வகை மரம், செடி, கொடிகளைக் காண்கின்றோம். அவற்றில் பூக்கும் புதுமலர்களை இறைவனுக்குச் சூட்டி மகிழ்கின்றார் மாண்புடையோர். அத்தாவரங்கள் யாவும் மாந்தரின் நோய் நீக்கும் இயற்கை வைத்தியர் என்பதை உணர்ந்தே, ஆங்கு வருவோர் உள்ளம்சிறப்பதோடுஉடலும் நோயின்றி சிறந்து விளங்க மூலிகைகளின் காற்றுப்பட்டு முழுமை பெற வைத்தார்கள். மூலிகைகளின் வகைகள், முழுமையான பயன்கள் அறிய, தாவர நூல்கள் தெளிவுற, மருத்துவ முறை அறிய கருத்தாய் அமைந்த கலைப்பள்ளி. எத்தனை பெரிய கருத்துடன் வித்தகர் அமைத்தனர் என எண்ணும்போது முன்னோரின் அறிவைக் கண்டு வியந்து புகழ்கின்றோம்; பிரகாரத்தைச் சுற்றும்போது பக்தி, பயனுற உலாவுதல், "நடைப் பழக்கம் நலம் பயக்கும்" என்ற முதுமொழிக்கு உதவு முறை, இயற்கையழகும், பிறருக்கும் பயன்படும் முறையில் படைத்தளித்தல் முறையில் ஈகை, என எத்தனை எத்தனை வகையில் வாழ்க்கைக்குரிய, வளம் தரும் கல்வி கற்க முடிகிறது!

---

திரு. வெ. சுந்தரம் - பரமக்குடி.

---

அடுத்து பெரிய மண்டபம். ஆங்கு கூரையைத் தாங்கி நிற்கும் பெரிய கற்றூண்கள். எத்தனை தூண்கள் இருந்தாலும் அத்தனையிலும் சிற்பங்கள். ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகைக் கலைக்கு ஆதார சுருதி கூட்டும் அற்புதப் படைப்பு. சுற்றுச் சுவர்களிலோ இறைவன் திருவிளையாடல்களை விளங்க வைக்கும் வண்ண ஓவியங்கள், சிற்பங்கள், அத்தோடு கல்வெட்டுக்கள் வரலாறு கூறி வரன்முறைப்படுத்தும். மண்டபம் பல வகையில் பயனுற, பாங்காக அமைந்திருக்கும். பட்டி மண்டபம், இசை மேடை, விவாத அரங்கு, திருமண மண்டபம், பேருரைக்கு ஓர் மண்டபம்—என பற்பல மண்டபப்

பகுதிகள் பல்கலை வளர, கலைஞர் சிறக்க, ஓய்வு கொள்ள, உவந்து இறைவன் நாமம் பஜனையாய் பாடி மகிழ அமைத்த முறைகள் எந்தப் பொறியியல் பள்ளியில் பயின்று தேர்ந்து சிறந்திட்ட முறை? எண்ணிப் பார்க்க விழையும் போது அமைத்தோர் திறனும், எத்தனை தலைமுறை வரினும், அத்தனை தலைமுறையும் இதனைத் தெரிந்து தெளிந்து இதனினும் சிறக்க, சிந்தனையைத் தூண்டும் சிந்தனைச் சிற்பிகளாக, ஆசானாக, அருங்கலை விற்பன்னராக விளங்கியதை விளக்கும் விவேகத்தை வளர்க்கும் கலைக் கூடமன்றோ?

நீராடும் வசதிக்கு தண்பொழில் தடாகம்—நாற்புறமும் நீராட நல்ல தொகு படிக்கட்டுகள். உடைமாற்ற உதவிடும் முறையில் தடாகத்தின் கரையில் அமைந்த மண்டபங்களும் தடுப்பறைகளும்: "நீரின்றமையா உலகு" என வள்ளுவர் கூறியதற்கொப்ப நீர் நிலைகள்—பயன்படுத்தற்கேற்ப சுற்றுச் சூழல். நடுவிலே நீராழி மண்டபம்—நீராழி மண்டபத்தில் இறைவனுக்குத் திருவிழா நடைபெறுமென்ற காரணத்தால், அந்நீரை பயபக்தியுடன் அசுத்தம் செய்யாது பயன்படுத்த ஏற்படுத்திய வழிமுறை, நீரில் ஏற்படும் அசுத்தம் அவ்வப்போது களைய அதில் வளர்க்கப்படும் மீன் வகை.

இவற்றை விடுத்து உள்ளே நுழைகிறோம் அடுத்து. ஆங்கு சிவ ஸ்தலமானால் நந்தி, விஷ்ணு ஸ்தலமானால் கருடாழ்வார், சக்தி கோயிலாயின் சிம்மம், முருகன் கோயிலாயின் மயில், இராமர் கோயிலாயின் ஆஞ்சநேயர் என்று இறைவன் சன்னிதானம் நோக்கி அமைந்த திருஉருவங்கள். அவற்றின் அழகையும் கம்பீரத்தையும் கண்டு வணங்கியதும் பலிபீடமும் கொடி மரமும் அருகருகே அமையக் காண்போம்.

கொடி போல் நம்மைச் சுற்றி வளைத்துள்ள மாயை எனும் கொடிய செயல்களான தீவினை அனைத்தையும் பலியிட்ட பின்னரே, நிர்மலமான அன்பினோடு தெளிந்த மனத்தோடு, பந்த பாசமெனும் அந்த காரத்தை அருவமாய் பலியிட்டு இறைவனை இதயத் தாமரையில் நிலை நிறுத்தி, உள்ளம், புறமும் தூய்மைப்படுத்தி, இல்லத்தில் தூசிகளைத் துடைத்து, நீரால் கழுவி, கோலமிட்டு அழகு மிளிர ஆனந்தம் கொள்ளுதல் போல் இறைவனிடம் செல்லும்போது தூய்மை துலங்க பேரானந்தம் பெறச் செல்ல வைக்கிறது.

கருவரையில் இறைவனைக் கற்பூர ஒளியில் கண்டானந்திக்கும் போது, அச்சோதி, ஒளிப்பிழம்பு உள்ளத்து மாயை முழுதும் சுட்டெரித்து ஒளிமயமான வாழ்வுக்கு, இறைவனே துணை, சோதி வடிவானவனே சாதனைக்கு வழி, அவன் தாள் பற்றிப்

பயனுற 'உன்னுள்ளத்தில் பக்தி எனும் ஒளி ஏற்று' என்ற தத்துவத்தை உணர்ந்து வணங்கி மகிழ்ந்து தேங்காய், பழம் பூசைக்குப் படைக்கின்றோம்.

தேங்காயின்மீது கடினமான ஓடு, உள்ளே நல்ல வெண்மையான பருப்பு. தேங்காய் உடைத்தலில் தன்னைச் சுற்றியுள்ள கடினமான மாயை எனும் ஓட்டை உடைத்தால் நிர்மலமான, தூய்மை மிக்க இனிமை தரும் பருப்பினைப் போன்று இறைவன் அமைவான் எனவும், கனிவர்க்கத்தைப் படைப்பதன் மூலம், தோலால் மூடப்பட்ட இவ்வுடம்புக்குள் இனிமையைக் கனிய வைப்பதற்கு முயல்வேன், அதற்கான கனிவை என்னிடம் காட்டு எனக் கூறாமல் பொருளால் கூறி வழிபடுகிறோம். வாயால் கூறக் கூடாதா, இப்பொருள்களைத் தான் பயன்படுத்த வேண்டுமா? என வினவலாம். இறை வணக்கத்தின் போது மனம், மெய், ஆவி ஆண்டவனிடம் ஈடுபட, அதன்பின் மாறும் குணம் மாந்தரின் குணம். ஞானம் என்பது சுலபமான செயலோ, படிப்போ அல்ல. அதற்குச் சான்றாக, நெருப்பைத் தொட்டால் சுடும் என அறிந்துள்ளது அறிவு. நெருப்பைத் தொட்டுப் பார்த்துச் சூட்டை உணர்ந்து தெரிதல் பட்டறிவு எனலாம் – அதாவது அனுபவ பூர்வமான அறிவு நெருப்பின் பயன்களை—விளக்கு எரிக்க, உணவு சமைக்க, மற்றும் அழிவுக்கும் பயன்படுத்த என வகைப்படுத்தி-அறிந்து, அந்தந்த வகைகட்கேற்ப பயன்படுத்தி பலன் பெறுதல் ஞானம். இம்முறையில் அறிவை, பட்டறிவாகக் கொள்ளும் நிலைக்காவது மாற்றிக் கொள்ளவே தான், இப்போதைய வழிபாட்டுக்குப் பின் உன்னை நினையாது வேலைகளில் மூழ்கினும், கடுமையின்றி கருணை மிகவாகி இனிமையுடன் விளங்கவும் கனிந்த உன் கருணையை எண்ணிக் களிக்கவும் உதவிட்டால் அன்பு கனிந்து கருணை கலந்து, நீ எனக்கு உதவுதல் போல் பிறர்க்கு நான் என்னால் முடிந்ததை பெற்று, விநியோகிப்பேன் என்றவாறு.

சூடிக் கொடுத்த சுடர் கொடிக்கு கோயிலே பள்ளி. அப்பர், சுந்தரர், தாயுமானவர் போன்ற சமயக் குரவர்கட்கும், ஆழ்வார்கட்கும்

அன்புக்குரிய,

'ஸப்தகிரி' — ஆசிரியர் அவர்களின் கவனத்திற்கு: சர்ச்சைக்கு உரிய 'பொருள்' பற்றிய விளக்கம் பிரசுரிக்கும்போது, உரிய வர்களிடமிருந்து அப் 'பொருள்' பற்றிய அறுதியிட்ட ஆதார நூல்களின் பெயர்களும், 'பொருள்' பயிலும் பக்கங்கள் முதலியனவும், உசாவியறிந்து வெளியிட்டால், அது ஆர்வம் மிக்கவர்களுக்குச் செய்தி விருந்தாய் அமையும் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

நிற்க. ''கல்கி' அவதாரம் எப்போது?'' எனும் தலைப்பில், ஜனவரி+ஆகஸ்டு'85-ல் பூம்புகார் திரு ஜி. சீனிவாசன் அவர்களும், ஏப்ரல்'85-ல் சென்னை திரு என். பாலசுந்தரம் அவர்களும் கட்டுரைகள் எழுதியுள்ளார்கள்.

காலக் கணக்கு என்னும் போது, புவி-வான-ஜோதிடயியலை ஆதாரமாகக் கொள்வதுதான் சாலச்சிறந்தது. அவ்வாறான அடிப்படையில்தான் நடைமுறையிலிருக்கும் பாஞ்சாங்களிலும் கலியுகாப்த ஆண்டுகளின் செலவு விவரம் காணப்படுகிறது. கலியுகத்தில் கழிந்தது ஆண்டுகள் 5085—86. இக்கட்டுரைக்கு ஆதார நூல் :-

The "Brihat jataka" of "Varaha mihira"-Translated into English by Mr. N. Chidambaram B. A. fellow of the Theosophical Society, and founder cf the Trivadi Jotistantra sabha.

மேற்காணும் "பிருஹஜ் ஜாதக" ஆங்கில மொழி பெயர்ப்பு நூலுக்காக 2—6—1885 ல் எழுதப் பெற்ற முதற் பதிப்பின் முகவுரையில் 26-ம் பக்கத்தில் நாடிக்கிரந்தங்களைப் பற்றிய அபிப்பிராயம் கூறப்படும் போது, வானுலாவு கோள்கள் தாம் முதலில் தொடங்கிய இடத்திற்கே எப்போது மீளும்? என்பதற்கு விடையாக யுகங்களின் கால அளவுகளும் விளக்கப்பட்டுள்ளன; இந்துக்களின் புவி-வான-ஜோதிடயியலின்படிக் கோள்களின் காலம் பற்றிய கணிதப் புள்ளி விவரம் வருமாறு :-

| | | | | |
|---|---|---|---|---|
| (i) | புதன் | 87.9693 | நாட்கள் | (Sidereal) |
| (ii) | சுக்கிரன் | 224.7008 | நாட்கள் | ( ,, ) |
| (iii) | பூமி | 365.2564 | நாட்கள் | ( ,, ) |
| (iv) | செவ்வாய் | 686.9795 | நாட்கள் | ( ,, ) |
| (v) | வியாழன் | 4332.5348 | நாட்கள் | ( ,, ) |
| (vi) | சனி | 10,759.2200. | நாட்கள் | ( ,, ) |
| (vii) | சந்திரன் | 27 நாட்கள்; 7 மணி; 45 நிமிடம்; 11 நொடிகள் | | ( ,, ) |

கிரகங்களுக்குரிய கால எண்களின் L. C. M. அடிப்படையில்—இந்துக்களின் 'வானியலின்படி ஒரு கல்பத்திற்கு 4,320,000,000 — ஹோராமணி—யாண்டுகள் —Sidereal years—ஆகும். அவற்றுக்குப் பின் 'க்ரீன் விச்'சுக்கு 76 பாகை கிழக்கு ரேகாம்சத்தில், பூமத்தியரேகைப் பகுதியில், இலங்கையின் அடிவானத்தில், மேஷ-விராசியின் தொடக்கப் புள்ளியில், வானுலாவு கோள்கள் (தாம் முதலில் தொடங்கிய இடத்திற்கே) மீளும்.

மேலும், ஒரு கல்பத்திற்கு 1000 சதுர்யுகங்கள்: ஒரு சதுர் யுகத்திற்கு 4,320,000 ஹோராமணி (Sidereal) ஆண்டுகள், அவற்றில் கலியுகத்திற்குரியவை 432,000 ஹோராமணி ஆண்டுகள்;

| | |
|---|---|
| துவாபர யுகம் | 4,32000X2= 8,64000; |
| திரேதாயுகம் | 4,32000X3=12,96000; |
| கிருதயுகம் | 4,32000X4=17,28000; |

ஒரு கல்பம் என்பது பிர்ம்மாவுக்கு ஒரு நாள் ஆகும். அது முடிந்தால் மகாப்ரளயம் ஏற்படும்; இவ்வாறு, அறுதியிடப் பெற்றத் துல்லியமான கணித விளக்கம் தரப்பட்டுள்ளது என்பதையறிவித்து அமைகின்றேன். (டாக்டர்: ஏ. ஆர். ஆர். ஜகன்னாதன் குடந்தை.)

கோயிலே பள்ளி. மேலும் தமிழ் சங்கங்கள் நடைபெற்றதும் கோயில்களில். குறள் அரங்கேற்றம் கோயில் பொற்றாமரைக் குளத்தில் சங்கப் பலகை சுவடிக் கிடங்கொடுத்த பின்னே! கம்பர் இராமாயண காவியத்தை அரங்கேற்றியது திருவரங்கப் பெருமான் திருக்கோயிலிலே! இது போல் கல்விக்குக் கலைமகள் இறைவியாக அமைந்ததுபோல் கல்விக் கூடமாக, பல்கலைக் கழகமாக கோயில்கள் விளங்கி பயனுற வாழ்வியல் முறை காட்ட கலைகள் சிறக்கக் காரணமாகிய தென்பதைத் தெள்ளத் தெளிவுற உணர்ந்த பின்னே அந்த தீர்க்கதரிசி ''பள்ளித் தலமனைத்தும் கோயில் செய்குவோம்'' என முழக்கமிட்டு, ''பாரத தேசமென்று தோள் கொட்டுவோம்'' என வீர முரசம் கொட்டி, தோள் வலி காட்ட வீரம் முட்ட வினையும் கல்விக்கும் கோயிலே அடிப்படை என உணர்ந்தான்.

மிகப் பிரும்மாண்டமான சுற்றுச் சுவர்கள். உயர்ந்த மதில்கள். கோயில் வாசலோ யானைமீது அம்பாரி, வைத்து அரசன் அமர்ந்து, குனியாது உள்ளே நுழையக் கூடிய முறையில் ஓங்கி உயர்ந்த வாயில்கள். அம்மட்டோ! உள்ளே ஓர் பெரும் படையே அணிவகுத்து நிற்கத் தக்க இட வசதி. தானியக் களஞ்சியம், மடைப்பள்ளி எனும் உணவு தயாரிக்குமிடம் என்று எத்தனை வகை அமைப்பு. கோபுரத்துப் பொம்மைகளோடு பொம்மைகளாக நின்று வேற்று நாட்டுப் படையெடுப்பைக் கண்காணித்து, எதிரிகளின் முற்றுகையைத் தகர்க்க தக்க வேலைப்பாடு. இம்மட்டோ இறைவன் திருக்கோயிலுக்கும், அரசன் அரண்மனைக்கும் சுரங்கப் பாதைகள்! எத்தனை அற்புதம் அக்கோயிலுக்குள்!

இசைக் கலை, சிற்பக்கலை, சித்திரக் கலை, மருத்துவம் கல்வி, தர்க்கம், பேருரை, பட்டி மண்டபம், வழக்காடு மண்டபம், ஈகை, அன்பு, பக்தி, தற்காப்பு, தாவர இயல், சமையற் கலை, சேமிப்பு, பாலர் கட்கும் கல்வி, கூட்டு வழிபாடு, சமய உணர்வு, நிர்வாக முறை, பொறியியல் கட்டிடக் கலை என சொல்ல ஒண்ணா அனைத்துக் கலைகளும் ஆங்கு பரிணமிக்க அமைந்ததே கோயில்.

கோயில் வளர கலைவளரும்–கலை வளர வாழ்க்கைத் தரம் உயரும். தாம் உயர இலக்கியம் உருவாகும். இலக்கியமே இந்நாட்டுப் பெருமைகூறும். இத்தனைக்கும் நாட்டின் பாதுகாப்பு முக்கியம். பாதுகாப்புப்படை அவசியம். படையும், குடியும் சிறக்க உணவு தேவை. உணவுக்கு உரிய விளை நிலங்கள் உழைப்போருக்கு உரிமைப்படுத்தி, தன் நாட்டின் செல்வம் செழிக்கச் செய்ய முடியும் என்ற அடிப்படை தத்துவத்திலே மன்னர்கள் மக்களுக்காகக் கோயில்கள் அமைத்தனர். அதனால் சீரும் சிறப்பும் உற்றனர். நாட்டை சிறப்புற நிர்வகிக்க முடிந்தது. எனவே கோயில் வளர அரும்பாடுபட்டனர். ஊர் தோறும் கோயில், குன்று தோறும் கோயில், குடை வரைக் கோயில், சிறிய கோயில், பெரிய கோயில், சிந்தனைக்குக் கோயில், செம்மை சேர்க்கக் கோயில் மொழி வளர்க்கக் கோயில், முத்தமிழ் காக்கக் கோயில் என கோயில் வளர அருந்தொண்டு ஆற்றினர் நம் முன்னோர்.

கோயில் திருவிழா நட்புக்கும், ஒற்றுமைக்கும் ஒருமைப்பாட்டுக்கும் வித்திட்ட பெருவிழா. ஒவ்வொரு காரணம் பற்றி நடைபெற, மொட்ட விழ்த்த முல்லை மணம் போல கலை மணம் பரப்பும். மக்களுக்குள் வேற்றுமை மறைந்து ஒற்றுமை நிலை பெற்று, கூட்டுறவு கொள்கையள வில் இல்லாது செய்கையில் காட்டி, பட்டி, தொட்டிகளிலும் கலை பவனி வரச் செய்து, ஒருமைப் பாட்டைக் காத்து வளர்த்தது இந்துக் கோயில். எனவே ''கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்'' என்ற நீதியே தோன்றியது. கோயில் சென்று ஆங்குறையும் இறைவன் அழகைக் காணும்போது, அறியாமை நீங்குகிறது. உள்ளத்தில் நிம்மதி ஏற்பட்டு புத்துணர்ச்சி ஏற்படுகிறது. எண்ணம் தூய்மையானால் பண்ணும் செயல் துலங்குமன்றோ-இது குறித்தே ''அறம் செய விரும்பு'' என்றார் ஔவையும். விரும்பு என்று சொன்ன தன் பொருள் யாது? விரும்பு மனம் முதலில் தோன்ற மனம் நல்ல செயலுக்கு விழையுமளவிற்குப் பக்குவப் படும். மனம் பக்குவப்பட்டால், மகிழ்வுடன் நலம் பயக்க விரைந்திடுவாய் – கோயிலுக்குச் செல்லும் அனைவரின் உள்ளத்தில் உறைவான் அன்றோ? எனவே ''கோயிலில் நின்று ஆயிரம் தலையைக் கண்டால் அன்று செய்த பாபம் போம்'' என்றார் போல் பாபம் அழிந்து புண்ணியச் செயல்கள் பொங்கி வர உள்ளத்தில் பக்தியால், உறுதி கொண்ட நெஞ்சமாய் கொள்ளுவது குறைவிலா இன்பமன்றோ? 'உள்ளுவதெல்லாம் உயர்வு' என்றும் ''உள்ளத்தனைய உயர்வு'' என்றும் கூறக் காரணம் யாது? உள்ள உணர்வுகளே செயலாய் விளங்கிடும் என்பதாலே ''நல்லதே நினை, நல்லதே பேசு, நல்லதே செய்'' என நவிலப்பட்டது. அதிலும் ''நல்லதே நினை'' என்று எண்ணுதல் எல்லாவற்றிற்கும் அடித்தளம் என்று வரையறுக்கப்பட்டது. எல்லாம் வல்ல வள்ளல் பெருமான் இறைவனை எண்ணி, இறைவன் புகழ்பாடி இறைத் தொண்டு புரிவோர் இறவாப் புகழ் பெற்றுள்ள முறையை ஈண்டு நினைவிற் கொள்ளப்பட வேண்டும். கோயிலே நன்மைகள் யாவிற்கும் உறைவிடம். அறிவு தெளிய, ஆற்றல் நிறைய, இன்பம் இனிதே இணைந்து உயர்வுக்குத் துணையாகும் கல்விக் கூடம், உயர்கல்வி நின்றுரைக்கும் பல்கலைக்கூடம் என்றே கோயில் கொண்டனர். எத்தனை ஆண்டுகள் ஆயினும் அவை அழியாது ஆற்றலைக் காட்டுகின்றன.

இவை அனைத்தையும் மனத்திரையில், திரைப்படமாக ஓடவிட்டு உண்மையினை உணர்ந்த பாரதி பாரத தேசம் ஓங்கு புகழ் தாங்கி நிற்க, பொங்குமின்பம் எங்கும் நிறைய ஆசை கொண்டு அதற்கு செழுமையும் சீர்மையும் நிறைய வேண்டுமென்ற எண்ணம் கொண்டு கோயில் வளர செங்கோல் வளரும் என்ற அடிப்படை உணர்ந்து,

'' பள்ளித் தலமனைத்தும் கோயில்
செய்குவோம்–எங்கள்
பாரத தேசமென்று தோள் கொட்டு
வோம்''

என விண்டுரைத்த வார்த்தையினை மீண்டும் கூறிக் கொண்டு, வளர்ந்த கோயில்களின் வரலாறு உணர்ந்து, அழிய விடாது பாதுகாத்து, அனைத்து நன்மையும் பெற்று இறைத் தொண்டால் உயர்வடைய கோயில் வளரச் செய்வோம் என்ற உறுதிப்பாட்டைக்கொண்டு, அதற்கு உறுதுணையாக பக்தி செலுத்தி இறைவன் தாளினைப் பணிவோம். ★

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED
AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY, MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501.

